உ

கடவுள் துணை.

காங்கேயர் செய்த

# உரிச்சொல் நிகண்டு.





இது

ஜீவகசிந்தாமணி வசன நூலாசிரியராகிய

மதுரைஜில்லா செம்பூர் வித்வான்

ம-௱-௱-ஸ்ரீ

வி. ஆறுமுகஞ்சேர்வை அவர்களால்

பார்வையிடப்பெற்று,

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

1914

விலை அணா 8.

# தொகுதி அட்டவணை.

உ

பரமபதி துணை.

# உரிச்சொல் நிகண்டு.

விநாயக வணக்கம்.

நேரிசைவெண்பா.

மதிபாய் சடைமுடித்து மாசுணப்பைம் பூட்டுச்
சதிபாய் குறுந்தாட்டுத் தான—நதிபாய்
இருகவுட்டு முக்கட்டு நால்வாய்த்தென் னுள்ளம்
உருகவிட்டு நின்ற வொளி.

(இதன் பொருள்.) என் உள்ளம் உருகவிட்டு நின்ற ஒளி - என் மனம் உருகுமாறு விரித்துநின்ற ஒளி, மதி பாய் சடை முடித்து - சந்திரகிரணம் பாவிய சடாமுடியையுடையது; மாசுணம் பை பூட்டு - பாம்பாகிய பசிய ஆபரணத்தையு முடையது; சதிபாய் குறுந்தாட்டு - தாளவடிவோடு மாறுபட்ட சிறிய காலையுமுடையது; தானம் நதி பாய் இரு கவுட்டு-மதமாகிய நதிபாயும் இரண்டு கபோலங்களையு முடையது; முக்கட்டு - மூன்று கண்களையுமுடையது; நால் வாய்த்து-ஞான்றசையும் வாயையுமுடையது, என்றவாறு.

சிவ வணக்கம்.

நேரிசை வெண்பா.

திருமாலுஞ் செங்கமல மேயானுங் காணாப்
பெருமான் பிறைசூடும் பெம்மா—னருவ்மூர்த்தி
னன்னெஞ்சி னுண்மறைமேயோன் றில்லை நடம்புரிவோ
னென்னெஞ்சின் மேய விறை.

நக்கன், பசுபதி, நாரிபாகன், அக்கரவார்த்தோன், அழலாடி, முக்கண்ணன், ஈசான், எண்டோளன், ஏறூர்ந்தோன், அந்திவண்ணன், பாசுபதன், பஞ்சானனன். (௧௨)

5. காலகா லன்காள கண்டன் கபாலிதிரி
சூலபாணி யெண்மூர்த்தி சோமதரா—னாலதர
னீறாடி மன்றாடி நித்தனத்த னெண்குணன்
ஆறானன் றாதை யாம்.

காலகாலன், காளகண்டன், கபாலி, சூலபாணி, அட்டமூர்த்தி, சோமதரன், ஆலதரன், நீறாடி, மன்றாடி, நித்தன், அத்தன், எண்குணன், ஆறானன்றாதை. (௧௩)

6. ஈசன் பசுபதி யீசான னென்றொன்றும்
நாச மிலாதோ னடனம்பன்—மாசறுசீர்க்
கங்கை தரித்தோன் கறைக்கண்டன் கண்ணுதலோன்
இங்கிவையெல் லாஞ்சிவன்பே ராம்.

ஈசன், பசுபதி, ஈசானன், நாசமிலாதோன், நடன், நம்பன், கங்கைதரித்தோன், கறைக்கண்டன், கண்ணுதலோன். (௯) ஆக (௧௮)

உமையின் பெயர்.

7. ஆரியை யுமை யபிராமி யம்பிகை
நாரி பவானி யமலை நாயகி—சாரிமய
வல்லி சிவை சாம்பவி மாதா வுருத்திரை
வெல்லும் விமலை யுமை.

ஆரியை, உமை, அபிராமி, அம்பிகை, நாரி, பவானி, அமலை, நாயகி, இமயவல்லி, சிவை, சாம்பவி, மாதா, உருத்திரை, விமலை. (௧௪)

காளியின் பெயர்.

8. தாரகற் காய்ந்தாள் பயிரவி சாமுண்டி
கூரிய மூவிலை வேற்குமரி—பேரெழி
லாளியூர் சூலி யலகைக் கொடியாள்கங்
காளியிவை காளியின் பேர்.

தாரகற்காய்ந்தாள், பயிரவி, சாமுண்டி, மூவிலைவேற்குமரி, சூலி, அலகைக்கொடியாள், கங்காளி. (௭)

துர்க்கையின் பெயர்.

9. இகன்மகிடற் காய்ந்தா ளெழிற்குமரி நீலி
சுகநிறத் தந்தரி துர்க்கை—பகவதி
வெய்ய சயமகள் விந்தைநிறக் கொற்றவை
யையை யடலாரி யை.

மகிடற்காய்ந்தாள், குமரி, நீலி, அந்தரி, பகவதி, சயமகள், விந்தை, கொற்றவை, ஐயை, ஆரியை. (௧௦)

விநாயகன் பெயர்.

10. பால்புரை நீற்றோன் மகன்பார்ப் பதிமைந்தன்
மான்மருகன் காமவேள் மைத்துனன்—வேள்முருகன்
முன்னோன் கணபதி மூவா விநாயக
னென்னோன் பகைதணிக்கு மேறு.

சிவன்மகன், பார்ப்பதிமைந்தன், மான்மருகன், காமவேள்மைத்துனன், முருகன்முன்னோன், கணபதி. (௬)

11. அங்குச பாச தராகு வாகன
னைங்கரத்தோ னாறு நிகர்மதத்தன்—வெங்கண்
ணிருமருப்பு மாமுகத்தன் முக்க ணிறைவ
னொருமருப்ப னென்னுள்ளத் தோன்.

அங்குசபாசதரன், ஆகுவாகனன், ஐங்கரத்தோன், ஆறுநிகர்மதத்தன், யானைமுகத்தன், முக்கணிறைவன், ஒருமருப்பன். (எ) ஆக (௧௩.)

முருகன் பெயர்.

12. முருகன் விசாகன் முதல்வன்சேய் மாயோன்
மருகன் குகன்குமரன் வானோர்க்—கொருதலைவன்
கங்கைமகன் கந்தன் கார்த்திகே யன்பொருப்பின்
மங்கைமக னென்சேம வைப்பு.

விசாகன், சிவன்மகன், மாயோன்மருகன், குகன், குமரன், வானோர்தலைவன், கங்கைமகன், கந்தன், கார்த்திகேயன், மலைமங்கை மகன். (௧௦)

13. ஆறிரண்டு தோளா னயிலான் மயிலூர்தி
யாறுமுகத்தா னமரர்க்காச்—சிறவுணர் [ன்
போர்கடிந்தான் றாரகனைக் காய்ந்தான பொருப்பெறிந்தா
சூர்தடிந்தான் வேளென் றனை.

பன்னிருதோளான், அயிலான், மயிலூர்தி, ஆறுமுகத்தான், அவுணர்போர்கடிந்தான், தாரகனைக்காய்ந்தான், பொருப்பெறிந்தான், சூர்தடிந்தான், வேள். (௯) ஆக (௧௧)

## திருமாலின் பெயர்.

14. ஆயிரம் பேரோ னனந்தன் பணிசயன
னேயுடை னெங்குமாய் நின்றபிரான்—றூயவ
னில்லது முள்ளதுமா மெங்கோன் றிருமடந்தை
வல்லவன் பின்னைக்கு மன்.

ஆயிரம்பேரோன், அனந்தன், பணிசயனன், எங்குநின்றபிரான், தூயவன், இல்லது முள்ளது மானவன், திருமடந்தைவல்லவன், பின்னைகேள்வன். (அ)

15. நெடியோன் குறளுருவ னேமியோன் புட்சேர்
கொடியோன் கரியோன்கோ விந்தன்—படியிடந்தோ
னாயன் முராரி யரிகேச வன்கண்ணன்
மாய னுலகளந்தோன் மால்.

நெடியோன், குறளுருவன், நேமியோன், புட்கொடியோன், கரியோன், கோவிந்தன், படியிடந்தோன், ஆயன், முராரி, அரி, கேசவன், கண்ணன், மாயன், உலகளந்தோன். (௧௪) ஆக (௨௨)

## செந்திருவின் பெயரும், மன்மதன்பெயரும்.

16. தாமரையாள் செய்யாள் கரிய வரிதேவி
மாமலரா ளிந்திரைபொன் செந்திருவி—ஐமமா
மன்மதன் மீனுயர்த்தோன் மாரனநங் கன்கருப்பு
வின்மதனன் விப்பகழி வேள்.

செந்திருவின் பெயர்:—தாமரையாள், செய்யாள், அரிதேவி, மா, மலராள், இந்திரை, பொன். (௭)

மன்மதன் பெயர்:—மீனுயர்த்தோன், மாரன், அநங்கன், மதனன், வேள். (௫)

17. காம னிரதி பதிசம் பாருதன்
னேமின் மதுசகன் சித்தசன்—பூமகன்
மைந்தன் மகரக் கொடியோன் மனோபவனம்
பைந்துடையோன் கந்தர்ப்ப னும்.

அமுதாசனர், விபுதர், ஆதித்தர், விண்ணோர், இமையோர், புத்தேளிர், இலேகர், அமரர், வானோர், தானவர்பகைவர், பொன்னுலகில்வாழ்நர், சுரர், வானவர், சுவர்க்கத்தோர்.

## அசுரர், அரக்கர் இவர்களின் பெயர்கள்.

22. தானவர் தண்டா ரவுணர் திதிபுதல்வர்
வானவர் மாற்றலர் வல்லசுரர்—மேனி
கரப்போர் நிருதர் நிசாசரர்கார் வண்ணர்
அரக்கர் பிசிதா சனர்.

அசுரர் பெயர்:—தானவர், அவுணர், திதிபுதல்வர், வானவர்மாற்றலர். (௪)

அரக்கர் பெயர்:—மேனிகரப்போர், நிருதர், நிசாசரர், கார்வண்ணர், பிசிதாசனர். (௫)

## குபேரன் பெயர்.

23. நிறைசெல்வன் புட்பகத் தேரோ னிதிபோ
னுதனதன் கூற்றை யுதைத்த—விறைவற்
கிட சகாய னடவியக்கர் கோமான்
குபேர னளகையார் கோன்.

நிறைசெல்வன், புட்பகத்தேரோன், நிதிபோன், தனதன், சிவனுக்குசகாயன், இயக்கர்கோமான், அளகையார்கோன். (௭)

## இயமன், வருணன் இவர்களின் பெயர்கள்.

24. சமன்மறலி யந்தகன் றண்டதான் கூற்று
நமன்றருமன் கால னடிவன்—யமன்பேர்
வலநதி கேள்வன் வருண பகவான்
சலபதி பாச தரன்.

இயமன்பெயர்:—சமன், மறலி, அந்தகன், தண்டதான், கூற்று, நமன், தருமன், காலன், கடிவன். (௮)

வருணன்பெயர்:—நதிகேள்வன், சலபதி, பாசதரன். (௯)

## சூரியன் பெயர்.

25. இரவி தபன னினன்பதங்கன் வெய்யோ
னருணன்மார்த் தாண்ட னருக்கன்—றரணி
யுதயனா தித்தன் றினகரன் பானு
கதிரவன் சூரியனுங் காண்.

இரவி, தபனன், இனன், பதங்கன், வெய்யோன், அருணன், மார்த்தாண்டன், அருக்கன், தரணி, உதயன், ஆதித்தன், தினகரன், பானு, கதிரவன். (கஉ)

சந்திரன் பெயர்.

26. அமுதகதி ரோன்விது வம்புலி யாலோன்
குமுத சகாயன் குபேர—னிமகர
னிந்துமதி திங்க ளிரவோ னுடுபதி
சந்திரன் சோமன் சசி.

அமுதகதிரோன், விது, அம்புலி, ஆலோன், குமுதசகாயன், குபேரன், இமகரன், இந்து, மதி, திங்கள், இரவோன், உடுபதி, சோமன், சசி. (கச)

செவ்வாய், புதன் இவர்களின் பெயர்கள்.

27. அங்கார கன்சே யழல்வக் கிரன்பௌமன்
துங்கார் குசனே தரைமகன்—பொங்காரல்
செவ்வாய் புதன்புந்தி மேதைநிபு ணன்புலவன்
கைவார் கணக்கன்மால் காண்.

செவ்வாயின் பெயர்:—அங்காரகன், சேய், அழல், வக்கிரன், பௌமன், குசன், தரைமகன், ஆரல், (அ)

புதன் பெயர்:—புந்தி, மேதை, நிபுணன், புலவன், கணக்கன், மால். (சு)

வியாழன், வெள்ளி, சனி இவர்களின் பெயர்கள்.

28. அரசன்பொன் பீதக னந்தணன் மந்திரி
சுரகுரு நாமம் வியாழன்—மருவுபுகர்
சுக்கிரன் பார்க்கவன் சுங்கன் கவிவெள்ளி
மைக்காரி மந்தன் சனி.

வியாழன் பெயர்:—அரசன், பொன், பீதகன், அந்தணன், மந்திரி, சுரகுரு. (சு)

வெள்ளியின் பெயர்:—புகர், சுக்கிரன், பார்க்கவன், சுங்கன், கவி. (ரு)

சனியின் பெயர்:—காரி, மந்தன். (உ)

மேடம், இடபம், மிதுனம், கர்க்கடகம் இவற்றின் பெயர்கள்.

29. கூடறு மருணங் கொறிமறி மேடமிவை
ஏறுவிடை மூரி யிடபமாந்—தேறிய

தண்டு மிதுனஞ் சவைமிரட்டை யாழ்விழவு
ஞெண்டுகள்ளி கர்க்கடக மாம்.

மேடத்தின் பெயர்:—அருணம், கொறி, மறி. (௩)
இடபத்தின் பெயர்:—ஏறு, விடை, மூரி. (௩)
மிதுனத்தின் பெயர்:—தண்டு, சவை, இரட்டை, யாழ், விழவு. (௫)
கர்க்கடகத்தின் பெயர்:—ஞெண்டு, கள்ளி. (௨)

சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனு இவற்றின் பெயர்கள்.

30. கொலையரி யாளி கொடும்புலி சிங்கம்
முலைமடந்தை பேர்கன்னி முற்று—துலைநிறை
தூக்குத் துலாமாகுஞ் சொல்லுந் தெறுக்காலேதேள்
தாக்குஞ் சிலைவிற் றனு.

சிங்கத்தின் பெயர்:—அரி, ஆளி, கொடும்புலி. (௩)
கன்னியின் பெயர்:—(மடந்தைபெயரனைத்துமாம்)
துலாத்தின் பெயர்:—துலை, நிறை, தூக்கு. (௩)
விருச்சிகத்தின் பெயர்:—தெறுக்கால், தேள். (௨)
தனுவின் பெயர்:—சிலை, வில். (௨)

மகரம், கும்பம், மீனம் இவற்றின் பெயர்களும், இராசியின் பெயரும்.

31. வடிமீன் கலைசுறு மானே மகரங்
குடங்கரீ ரஞ்சாடி கும்ப—நெடுமயிலை
வல்ல சலசரமீன் மச்சமிவை மீன
மில்லோரை ராசியிவை யாம்.

மகரத்தின் பெயர்:—மீன், கலை, சுறு, மான். (௪)
கும்பத்தின் பெயர்:—குடம், கரீரம், சாடி. (௩)
மீனத்தின் பெயர்:—மயிலை, சலசரம், மீன், மச்சம். (௪)
இராசியின் பெயர்:-இல், ஓரை. (௨)

விண்மீன், திக்கு இவற்றின் பெயர்கள்.

32. தாரகை சோதி தயங்குதா ரகண
மேருடை நன்னா ளுடுமீனின்—போர
மிசைபுல மாதிரங்கோ காட்டை யரிதந்
திசைக்குப மாசைதேந் திக்கு.

விண்மீனின் பெயர்:—தாரகை, சோதி, தாரகணம், நாள், உடு. (௫)

திக்கின் பெயர்:—புலம், மாதிரம், கோ, காட்டை, அரிதம், திசை, ககுபம், ஆசை, தேம். (௯)

## ஆகாயம், மேகம் இவற்றின் பெயர்கள்.

33. ஆகாய மந்தரமீ வானம் பரம்விசும்பு
மாகம் வெளிமா திரங்கொண்டல்—மேகமுகில்
கார்கனம்விண் கொண்மூ பயோதரம்வா னம்புதம்
வார்ப்புன்மை மாரி மழை.

ஆகாயத்தின் பெயர்:—அந்தரம், மீ, வான், அம்பரம், விசும்பு, மாகம், வெளி, மாதிரம். (௮)

மேகத்தின் பெயர்:—கொண்டல், முகில், கார், கனம், விண், கொண்மூ, பயோதரம், வான், அம்புதம், புயல், மை, மாரி, மழை. (௧௩)

## எரியின் பெயர்.

34. சாதவே தாவே தபனன் றனஞ்சயன்
சோதி யுதாசன னேதூம—கேது
சுசியே சுவலனே சித்திர பானு
வசுவரியவ் வாயு சகன்.

சாதவேதா, தபனன், தனஞ்சயன், சோதி, உதாசனன், தூமகேது, சுசி, சுவலன், சித்திரபானு, வசு, அரி, வாயுசகன். (௧௨)

## எரியின் பெயரும், காற்றின் பெயரும்.

35. கனலழ றீத்தழல் பாவகன் வன்னி
யனல்சிகி யங்கி பெரியா—மநிலங்கா
லூதை பவன னுயிர்ப்பொலிவங் கூழ்சலனன்
வாதம் வளிமா ருதம்.

கனல், அழல், தீ, தழல், பாவகன், வன்னி, அனல், சிகி, அங்கி. (௯) ஆக (௨௧)

காற்றின் பெயர்:—அநிலம், கால், ஊதை, பவனன், உயிர்ப்பு, ஒலி, வங்கூழ், சலனன், வாதம், வளி, மாருதம். (௧௧)

36. கந்த வகனே சமீரன் சதாகதி
கந்தவா கன்பிர பஞ்சனன்—வந்து
பரிசன னாசுகன் பவமானன் வாயு
வரிமா பலனேகாற் றும்.

கந்தவகன், சமீரன், சதாகதி, கந்தவாகன், பிரபஞ்சனன், வந்து, பரிசனன், ஆசுகன், பவமானன், வாயு, அரி, மாபலன். (௧௨) ஆக (௨௩)

## புனலின் பெயர்.

37. வாரி சலஞ்சலிலந் தோயம் வனம்புவனம்
நீரங்கீ லாலங் கவந்தங்கார்—காரம்

தினத்தின் பெயர்:—எல், திவசம். (உ)

பகலின் பெயர்:—திவா. (௩)

இரவின் பெயர்:—எல்லி, விபாவரி, யாமினி, அல், இரசனி, கங்குல், நிசா, நிசி, நத்தம். (௪)

### இடி, மின் இவற்றின் பெயர்கள்.

42. வெடியசனி செல்லு விண்ணே றுருமு
இடியின்பேர் மின்ன லிலங்கல்—கடியவாஞ்
சஞ்சலை சம்பை சபலை கனருசி
மிஞ்சு தடித்துமிவை மின்.

இடியின் பெயர்:—வெடி, அசனி, செல், விண்ணேறு, உருமு (௬)

மின்னின் பெயர்:—மின்னல், இலங்கல், சஞ்சலை, சம்பை, சபலை, கனருசி, தடித்து. (௭)

தேவப்பெயர்த்தொகுதி முற்றுப்பெற்றது.

---

## இரண்டாவது
## மக்கட்பெயர்த்தொகுதி.

### முனிவர் பெயர்.

1. ஐயர் துறந்தோ ரருந்தவர் பற்றற்றோர்
பொய்யிகந்தோ ரைந்து புலன்வென்றோர்—மெய்யர்
கனிமூல சாகா சனர்கோபங் காய்ந்தோர்
முனிவ ரறவோர் மொழி.

ஐயர், துறந்தோர், அருந்தவர், பற்றற்றோர், பொய்யிகந்தோர், ஐம்புலன்வென்றோர், மெய்யர், கனிமூலசாகாசனர், கோபங்காய்ந்தோர், அறவோர். (௧௦)

### பார்ப்பார், அரசர் இவர்களின் பெயர்கள்.

2. மறையவர் வேதியர் வையகத் தேவ
ரறுதொழிலோ ரந்தணர் பார்ப்பா—ரிறைவ
னரபதி கொற்றவன் வேந்தன் முதல்வன்
புரவலன் கோபூ பதி.

பார்ப்பார் பெயர்:—மறையவர், வேதியர், வையகத்தேவர், அறுதொழிலோர், அந்தணர். (௬)

அரசன் பெயர்:—இறைவன், நரபதி, கொற்றவன், வேந்தன், முதல்வன், புரவலன், கோ, பூபதி. (௮)

### வைசியர், சூத்திரர் இவர்களின் பெயர்கள்.

3. ஒத்தபொருள் செய்வோ ரயனூரு வில்வந்தோர்
முத்தொழி லோர்வணிகர் மொய்தனத்தோர்-மெய்த்தும்
எழின்மலரோன் பாதத்தில் வந்தோ ரிசைபேர்த்
தொழிலுடை யோர்சூத் திரர்.

வைசியர் பெயர்:—பொருள்செய்வோர், அயனூருவில் வந்தோர், முத்தொழிலோர், வணிகர், தனத்தோர். (௫)

சூத்திரர்பெயர்:—பிரமன்பாதத்தில் வந்தோர், ஏர்த்தொழிலுடையோர். (௨)

### மனிதர் பெயரும், ஆடவன் பெயரும், பெண் பெயரும்.

4. நரர்மனிதர் மானுடர் மானவர் மாக்கள்
புருடனா ணாடவ னேடீ—வரிவைபிணா
அங்கனை நாரி வனிதைமக ளேடமாது
மங்கை மடந்தைபெண் பேர்.

மனிதர் பெயர்:—நரர், மானுடர், மானவர், மாக்கள். (௪)

ஆடவன் பெயர்:—புருடன், ஆண், ஆடே. (௩)

பெண் பெயர்:—அரிவை, பிணா, அங்கனை, நாரி, வனிதை, மகடே, மாது, மங்கை, மடந்தை. (௯)

### பேடியின் பெயரும், குறளின் பெயரும், கூனின் பெயரும், பிண்டமிலா வுறுப்பின் பெயரும்.

5. பேடி கிலீவமலி பெண்டகஞ் சண்டமே
நீடில் குறள்வா மனஞ்சிந்து—கோடிய
கூன்பெய ராகு முடம்முடங்கல் கொள்கையில்லா
வூன்பிண்ட மில்லா வுறுப்பு.

பேடியின் பெயர்:—கிலீவம், அலி, பெண்டகம், சண்டம். (௪)

குறளின் பெயர்:—வாமனம், சிந்து. (௨)

கூனின் பெயர்:—முடம், முடங்கல். (௨)

பிண்டமில்லா வுறுப்பின் பெயர்:—கொள்கையில்லாவூன். (௧)

### தந்தை, தாய், மகன் இவர்களின் பெயர்கள்.

6. தாதை பிதாவைய னத்தனப் பன்றந்தை
யேதமி லன்னையின் குள்பயந்தாண்—மாதாதாய்

சந்ததி தோன்றல் சிறுவன்சேய் புத்திரன்
மைந்தன் புதல்வன் மகன்.

தந்தையின் பெயர்:—தாதை, பிதா, ஐயன், அத்தன், அப்பன். ()
தாயின் பெயர்:—அன்னை, ஈன்றாள், பயந்தாள், மாதா. (௪)
மகன் பெயர்:—சந்ததி, தோன்றல், சிறுவன், சேய், புத்திரன், மைந்தன், புதல்வன். (௭)

மணவாளன், மனைவி இவர்களின் பெயர்கள்.

7· கணவன் பதிகாந்தன் காதல னன்பன்
றுணைவன் றலைவன் கொழுநன்—மணவாளன்
றற்பா ரியைதுணைவி தாரமில் லாண்மனைவி
கற்பாண்மிக் காள்கா தலி.

மணவாளன் பெயர்:—கணவன், பதி, காந்தன், காதலன், அன்பன், துணைவன், தலைவன், கொழுநன். (௮)

மனைவியின் பெயர்:—பாரியை, துணைவி, தாரம், இல்லாள், கற்பின்மிக்காள், காதலி. (௬)

உறவின் பெயர்.

8· குடும்பந் துணைநட்புக் கூளிகேள் சுற்றங்
கடும்புதமர் மித்திரர் நட்டார்—அடைந்தவர்
பற்றுயார் பந்தம் விருந்தந் தொடரொக்க
லுற்றார் கிளைஞ ருறவு.

குடும்பம், துணை, நட்பு, கூளி, கேள், சுற்றம், கடும்பு, தமர், மித்திரர், நட்டார், அடைந்தவர், பற்றுயார், பந்தம், விருந்தம், தொடர், ஒக்கல், உற்றார், கிளைஞர். (௧௮)

வேடர், இடையர் இவர்களின் பெயர்கள்.

9· குறவர் சவரர் புளிஞர் கிராதர்
மறவ ரெயினர் வியாதர்—விறல்வேடர்
கானவர் போண்டர் கோவலர் கோபால
ரானிடைய ராயர்பெய ராம்.

வேடர் பெயர்:—குறவர், சவரர், புளிஞர், கிராதர், மறவர், எயினர், வியாதர், கானவர். (௮)

இடையர் பெயர்:—அண்டர், கோவலர், கோபாலர், ஆயர். (௪)

## பெரியோர் பெயரும், கீழ்மக்கள் பெயரும்.

10. *ஆரியர் நல்லோ ரறிவுடையோர் பண்டிதர்*
*சீரியர் சான்றோர் பெரியோர்பேர்—பூரியர்*
*நில்லா மனத்தசடர் நீசர் நெறியில்லார்*
*கல்லார் கயவர் கலர்.*

*பெரியோர் பெயர்:—ஆரியர், நல்லோர், அறிவுடையோர், பண்டிதர், சீரியர், சான்றோர்.* (௬)

*கீழ்மக்கள் பெயர்:—பூரியர், அசடர், நீசர், நெறியில்லார், கல்லார், கயவர், கலர்.* (௭)

## பகைவர் பெயர்.

11. *மன்னாதார் மாற்றார் மருவலர்வேண் டாரடையார்*
*இன்னாதார் கூடா ரிகலினர்—ஒன்னாதார்*
*செற்றா ரமித்திரர் சேரார்நண் ணார்செறுநர்*
*பற்றார் பகைவர் பார்.*

*மன்னாதார், மாற்றார், மருவலர், வேண்டார், அடையார், இன்னாதார், கூடார், இகலினர், ஒன்னாதார், செற்றார், அமித்திரர், சேரார், நண்ணார், செறுநர், பற்றார், பார்.* (௧௧)

## படைவீரர் பெயர்.

12. *வீரர் வயவர் மறவர் மிகுமன்னர்*
*தீர ரபயர் தெறுந்தொழிலோர்—சூரர்*
*பொருந ரயிலுழவர் போகா விறலோர்*
*செருநர் செருத்தொழி லோர்.*

*வயவர், மறவர், மன்னர், தீரர், அபயர், தெறுந்தொழிலோர், சூரர், பொருநர், அயிலுழவர், விறலோர், செருநர், செருத்தொழிலோர்.* (௧௨)

## கோடிப்படை, படையுறுப்பு, படைவகுப்பு இவற்றின் பெயர்களும், சதுரங்கசேனையின் பெயரும், சேனையின் பெயரும்.

13. *தூறபடைமுன் செல்லார் தூசியணி நெற்றி*
*யுறுபடை* கை யொட்டுண்டை யூக—தெறுசேனை*
*யானைதேர் மாச்சது ரங்கமா குந்தண்டம்*
*தானைகட கந்தந் திரம்.*

---

* கை - படைவகுப்பு.

கொடிப்படையின் பெயர்:—தார். (க)
படையுறுப்பின் பெயர்:—தூசி, அணி, கேற்றி. (ங)
படைவகுப்பின் பெயர்:—ஒட்டு, உண்டை, யூகம். (ங)
சதுரங்கசேனையின் பெயர்:—காலாள், யானை, தேர், குதிரை ()
சேனையின் பெயர்:—தண்டம், தானை, கடகம், தந்திரம். (ச)

பாதம், முழந்தாள், தொடை, அல்குல், இடை
இவற்றின் பெயர்கள்.

14. சரணடி பாதந்தாள் சானு முழந்தாள்
திரளுங் குறங்குகவா னூரு—வரைநிதம்ப
மல்குன் மருங்கு னடுவு நுசுப்பிவை
யொல்குமிடைக் கொத்த பெயர்.

பாதத்தின் பெயர்:—சரண், அடி, தாள். (ங)
முழந்தாளின் பெயர்:—சானு. (க)
தொடையின் பெயர்:—குறங்கு, கவான், ஊரு. (ங)
அல்குலின் பெயர்:—அரை, நிதம்பம். (உ)
இடையின் பெயர்:—மருங்குல், நடு, நுசுப்பு. (ங)

வயிறு, கொப்பூழ், குயம், மார்பு, கை இவற்றின் பெயர்கள்.

15. வயிறு வயினுதர நாபியுந்தி கொப்பூழ்
குயககில் கொங்கைதனஞ் சொர்க்கம்—பயோதர
மொய்கதிர்ப்பூ ணாக முரமரும மார்பகலங்
கைபுயந்தோ ளத்தங் கரம்.

வயிற்றின் பெயர்:—வயின், உதரம். (உ)
கொப்பூழின் பெயர்:—நாபி, உந்தி. (உ)
குயத்தின் பெயர்:—ககில், கொங்கை, தனம், சொர்க்கம், பயோதரம். (ஞ)
மார்பின்பெயர்:—ஆகம், உரம், மருமம், அகலம். (ச)
கையின்பெயர்:—புயம், தோள், அத்தம், கரம். (ச)

விரல், நகம், கழுத்து, காது, உதடு இவற்றின் பெயர்கள்.

16. விரலங் குலியா நகமுகி ராகுஞ்
சிரதாங் கண்டங் கழுத்துக்—கிரீவங்
களமாஞ் செவிகன்னங் காததர மோட்ட
முனவாகு முத்த முதடு.

விரலின் பெயர்:—அங்குலி. (௧)

நகத்தின் பெயர்:—உகிர். (௧)

கழுத்தின் பெயர்:—சிரோதரம், கண்டம், கிரீவம், களம். (௪)

காதின் பெயர்:—செவி, கன்னம். (௨)

உதட்டின் பெயர்:—அதரம், ஒட்டம், முத்தம். (௩)

நா, பல், மூக்கு, கண், நெற்றி இவற்றின் பெயர்கள்.

17. நாக்குநாத் தாலு நகைமுறுவல் பல்லெயிறு
மூக்கின் பெயர்நாசி துண்டமா—நோக்க
நயனம் விழிநாட்ட நேத்திரங் கோக்க
ணியனுத னெற்றியிலா டம்.

நாக்கின் பெயர்:—நா, தாலு. (௨)

பல்லின் பெயர்:—நகை, முறுவல், எயிறு. (௩)

மூக்கின் பெயர்:—நாசி, துண்டம். (௨)

கண்ணின் பெயர்:—நோக்கம், நயனம், விழி, நாட்டம், நேத்திரம், கோ. (௬)

நெற்றியின் பெயர்:—நுதல், இலாடம். (௨)

ஆண்மயிர், பெண்மயிர் இவற்றின் பெயர்கள்.

18. பங்கி நவிர்குஞ்சி யோரி மயிர்பித்தை
மங்கலமா மைந்தர்க்கு மாதர்க்குக்—கொங்கார்
குரலைம்பால் கூந்தல் குழல்கூழை யோதி
சுருளளகங் குந்தளமாச் சொல்.

ஆண்மயிரின் பெயர்:—பங்கி, நவிர், குஞ்சி, ஓரி, பித்தை. (௫)

பெண்மயிரின் பெயர்:—குரல், ஐம்பால், கூந்தல், குழல், கூழை, ஓதி, அளகம், குந்தளம். (௮)

தலை, முதுகு, மேல்வாய், தேமல் இவற்றின் பெயர்கள்.

19. சிரமுத்த மாங்கங்கஞ் சென்னி தலையாம்
வெரிந்முதுகு தாடியண்ண மேல்வாய்—புரிகுழல்சேர்
தேமொழிபாய் தேமல் பொறிதிதலை துத்திசுணங்
காமென் றுரைப்பரறி ஞர்.

தலையின் பெயர்:—சிரம், உத்தமாங்கம், கம், சென்னி. (௪)
முதுகின் பெயர்:—வெரிந். (௧)
மேல்வாயின் பெயர்:—தாடி, அண்ணம். (௨)
தேமலின் பெயர்:—பொறி, திதலை, தித்தி, சணங்கு. (௪)

## உடலின் பெயர்.

20. புரங்கடம் விக்கிரகந் தேகமுடம் பாகங்
குரம்பை யுடன்மேனி பிண்ட—சிரம்புருவ
மூர்த்தங் களேவரம் யாக்கை தனுவங்கம
காத்திர மெய்கரய மாம்.

புரம், கடம், விக்கிரகம், தேகம், உடம்பு, ஆகம், குரம்பை, மேனி, பிண்டம், உருவம், மூர்த்தம், களேவரம், யாக்கை, தனு, அங்கம், காத்திரம், மெய், காயம். (௧௮)

## நாதம், உயிர், மனம், அறிவ, தெளிவு இவற்றின் பெயர்கள்.

21. விந்துபொறி யாவி பிராண னுயிர்சிவன்
சிந்தை மனநெஞ்சு சித்தமுளப்—புந்தியாம்
போற்று மறிவுணர்வு ஞானம் புலன்போதந்
தேற்றந் துணிவு தெளிவு.

நாதத்தின் பெயர்:—விந்து, பொறி. (௨)
உயிரின் பெயர்:—ஆவி, பிராணன், சிவன். (௩)
மனத்தின் பெயர்:—சிந்தை, நெஞ்சு, சித்தம், உளம். (௪)
அறிவின் பெயர்:—புந்தி, உணர்வு, ஞானம், புலன், போதம். (௫)
தெளிவின் பெயர்:—தேற்றம், துணிவு. (௨)

ஆகச் செய்யுள்—௨௧.

மக்கட்பெயர்த்தொகுதி முற்றுப்பெற்றது.

---

மூன்றாவது

# விலங்கின் பெயர்த்தொகுதி.

## சிங்கத்தின் பெயர்.

1. முடங்குளை கோளரி கேசரி சிங்க
மடுந்திறற் சீயம் வயமா—மடங்கலே
பஞ்சா னனமாளி கண்டீ ரவமரி
யஞ்சா நகாயுதமு மாம்.

முடங்குளை, கோளரி, கேசரி சீயம், வயமா, மடங்கல், பஞ்சானனம், ஆளி, கண்டீரவம், அரி, நகாயுதம். (கக)

## புலியின் பெயர்.

2. வெருகில் வியாக்கிரந் தீவிசார்த் தூலம்
வரியுழுவை வேங்கை வயமா—மிருகாதி
திண்டிறல் வல்லியஞ் சித்திரகா யந்தரக்குப்
புண்டரிகம் புல்லுப் புலி.

வியாக்கிரம், தீவி, சார்த்தூலம், வரி, உழுவை, வேங்கை, வயமா, மிருகாதி, வல்லியம், சித்திரகாயம், தரக்கு, புண்டரிகம், புல். (கஉ)

## யானையின் பெயர்.

3. தும்பிகயம் யானை கறையடி குஞ்சரந்தோல்
உம்பலிபம் வேழங் கரியத்தி—வெம்பகடு
போதகம் வாரணந் தந்தி யுவாக்களிறு
மாதங்க நாகங்கைம் மா.

தும்பி, கயம், கறையடி, குஞ்சரம், தோல், உம்பல், இபம், வேழம், கரி, அத்தி, பகடு, போதகம், வாரணம், தந்தி, உவா, களிறு, மாதங்கம், நாகம், கைம்மா. (கங)

## பெண்யானையின் பெயரும், யானைமதம், யானைப்பட்டம், யானைக்கோம்பு இவற்றின் பெயர்களும்.

4. தம்பே ரமையிரதி சிந்துரஞ்சா மோற்பவை
கம்பமதந் தானங் கடங்கடாம்—கும்பஞ்சே

ஓடையாம் பட்ட மொளிர்கிம் புரிமருப்புக்
கோடெயிறு தந்தமாங் கொம்பு.

பெண்யானையின் பெயர்:—தம்பேரமை, இரதி, சிந்தூரம், சாமோத்பவை. (௪)

யானைமதத்தின் பெயர்:—தானம், கடம், கடாம். (௩)

யானைப்பட்டத்தின் பெயர்:—ஓடை. (௧)

யானைக்கொம்பின் பெயர்:—மருப்பு, கோடு, எயிறு, தந்தம். (௪)

## குதிரையின் பெயர்.

5. குரதம் வாசி குதிரை யிவுளி
துரகம் புரவி துரங்கம்—பரியரி
கோடகம் பாய்மா சயிந்தவங் கந்தருவ
மாடல் வயமா வயம்.

குரதம், வாசி, இவுளி, துரகம், புரவி, துரங்கம், பரி, அரி, கோடகம், பாய்மா, சயிந்தவம், கந்தருவம், வயமா, வயம். (௧௪)

## பன்றியின் பெயர்.

6. கருமாவே கேழ லேறுழிகோ லஞ்சூ
கரமேனங் கோணி வராகங்—குரோடமரி
போத்திரிபூ தாரங் கிருட்டி கிரிகிடி
பேர்த்தகு பன்றியின் பேர்.

கருமா, கேழல், ஏறுழி, கோலம், சூகரம், ஏனம், கோணி, வராகம், குரோடம், அரி, போத்திரி, பூதாரம், கிருட்டி, கிரி, கிடி. (௧௫)

## குரங்கின் பெயர்.

7. பிலவங்க நாக கீர்ந்தரங் கீசகம்
வலிமுகஞ் சாகா மிருகம்—கொலைகடுவன்
வானர மர்க்கட மந்தி குரங்கரி
கானவன் பூகங் கவி.

பிலவங்கம், நாகம், கீர்ந்தரம், கீசகம், வலிமுகம், சாகாமிருகம், வானரம், மர்க்கடம், மந்தி, அரி, கானவன், பூகம், கவி. (௧௩)

## காடி, இரலை இவற்றின் பெயர்கள்.

8. *வெண்பல்லம் வல்லூகம் வேக வுளியமெறு*
*தின்பல்லூ கஞ்செங்கண் மாகாடி—யெண்கு*
*கலைநெடுங் கோட்டுக் கலைபுல்வாய் கவ்வி*
*பிணையா மிரலையின் பேர்.*

*காடியின் பெயர்:—வெண்பல்லம், வல்லூகம், உளியம், எறு, பல்லூகம், செங்கண்மா, எண்கு.* (௭)

*இரலையின் பெயர்:—கலை, புல்வாய், கவ்வி.* (௩)

## மான், செந்நாய், நரி, காட்டுப்பசு இவற்றின் பெயர்கள்.

9. *அரிணமான் சாரங்க மேணங் குரங்கம்*
*விருகஞ்செந் நாய்கொக்கு மாகும்— நரியிகலன்*
*கோமாயு சம்புகம் பூரிமா யுக்குரோட்டா*
*ஆமாவின் பேர்கவய மா.*

*மானின் பெயர்:—அரிணம், சாரங்கம், ஏணம், குரங்கம்.* (௪)

*செந்நாயின் பெயர்:—விருகம், கொக்கு.* (௨)

*நரியின் பெயர்:— இகலன், கோமாயு, சம்புகம், பூரிமாயு, குரோட்டா.* (௫)

*காட்டுப்பசுவின் பெயர்:—கவயமா.* (௧)

## கருங்குரங்கு, முசு, கழுதை, ஒட்டகம், உடும்பு இவற்றின் பெயர்கள்.

10. *கரியகுரங் கியூக முசுக்கோலாங் கூலங்*
*காரமொடுவா லேயங் கழுதை—கரப*
*மிரவணந்தா சேரக மொட்டக மாகு*
*முரமிகு கோதா வுடும்பு.*

*கருங்குரங்கின் பெயர்:—யூகம்.* (௧)

*முசுவின் பெயர்:—கோலாங்கூலம்.* (௧)

*கழுதையின் பெயர்:—காரம், வாலேயம், கரபம்.* (௩)

*ஒட்டகத்தின் பெயர்:—இரவணம், தாசேரகம்.* (௨)

*உடும்பின் பெயர்:—கோதா.* (௧)

மரை, முட்பன்றி, பூனை, கவரிமா இவற்றின் பெயர்கள்.

11. *ஆவிதங் கானக் குதிரை மரையாகுந்*
*தாவுமுண் மாவெய் சல்லிய — மேவிய*
*மீன்கவர் மார்ச்சாலம் வெருகுவிலா ளம்பூனை*
*வான்சவரி மாகவரி மா.*

*மரையின் பெயர்:—ஆவிதம், கானக்குதிரை.* (௨)

*முட்பன்றியின் பெயர்:—முண்மா, எய், சல்லியம்.* (௩)

*பூனையின் பெயர்:—மார்ச்சாலம், வெருகு, விலாளம்.* (௩)

*கவரிமாவின் பெயர்:—சவரி.* (௧)

முயல், நாய் இவற்றின் பெயர்கள்.

12. *தக்க வயமுஞ் சசமு முயல்சுணங்கன்*
*குக்கனே சாரமே யன்சுனகன் — மிக்கசுவா*
*கோளினர தேரு மெகினங் கொடுமுடுவல்*
*ஞாளி ஞமலிபட்டி நாய்.*

*முயலின் பெயர்:—வயம், சசம்.* (௨)

*நாயின் பெயர்:—சுணங்கன், குக்கன், சாரமேயன், சுனகன், சுவா, எகினம், முடுவல், ஞாளி, ஞமலி, பட்டி.* (௰)

ஓந்தி, எலி, பெருச்சாளி, அணில் இவற்றின் பெயர்கள்.

13. *கோம்பிசர டங்காம ரூபி கொடுமுசலி*
*பாம்பஞ்சுந் தோகைப் பகையோந்திக் — காம்பெயராம்*
*வேக வெலிகருப்பை மூடிகம் வெவ்விட*
*ராகு வணில்வெளி லாம்.*

*ஓந்தியின் பெயர்:—கோம்பி, சரடம், காமரூபி, முசலி, தோகைப் பகை.* (௫)

*எலியின் பெயர்:—கருப்பை.* (௧)

*பெருச்சாளியின் பெயர்:—மூடிகம், விடர், ஆகு.* (௩)

*அணிலின் பெயர்:—வெளில்.* (௧)

பசு, எருது இவற்றின் பெயர்கள்.

14. *தேனுவும் பெற்றமுங் கோவுஞ் செழும்பசுவு*
*மானுஞ் சுரபியு மாவாகு — மானே*

திடபம் விடையெருது கோபதி புல்லந்
திடமூரி புங்கவஞ் சே.

பசுவின் பெயர்:—தேனு, பெற்றம், கோ, ஆன், சுரபி, ஆ. (சு)
எருத்தின் பெயர்:—ஆன், எருது, இடபம், விடை, கோபதி, புல்லம், மூரி, புங்கவம், சே. (கூ)

எருமை, செம்மறியாடு, வெள்ளாடு இவற்றின் பெயர்கள்.

15. கருமகிடங் கவரி கார்மேதி காரா
னெருமையின் பேராகு மென்ப—துருவைமை
யாகு முரப்பிரம் வெள்ளா டயந்தகர்
சாகஞ் சகஞ்சா கணம்.

எருமையின் பெயர்:—மகிடம், கவரி, மேதி, காரான். (ச)
செம்மறியாட்டின் பெயர்:—துருவை, மை. (உ)
வெள்ளாட்டின் பெயர்:—உரப்பிரம், அயம், தகர், சாகம், சகம், சாகணம். (எ)

கருடன், மயில், குயில் இவற்றின் பெயர்கள்.

16. ககபதி நாகா சனனே கலுழன்
றிகழ்வைன தேயன் கருடன்—சிகிமே
மயின்மஞ்ஞை தோகை மயூரங் கலாபி
குயில்கள கண்டங்கோ கிலம்.

கருடன் பெயர்:—ககபதி, நாகாசனன், கலுழன், வைனதேயன். (ச)
மயிலின் பெயர்:—சிகி, மஞ்ஞை, தோகை, மயூரம், கலாபி. (ரு)
குயிலின் பெயர்:—களகண்டம், கோகிலம். (உ)

வண்டு, கிளி இவற்றின் பெயர்கள்.

17. வரியளி தேன்மா மதுகரந் தும்பி
யரியறுகால் வண்டு கழுது—பிரமரஞ்
சாரங்கஞ் சிலிமுகஞ் சுரும்பாகும்
கின்னாசகந் தத்தை கிளி.

வண்டின் பெயர்:—வரி, அளி, தேன், மா, மதுகரம், தும்பி, அரி, அறுகால், கழுது, பிரமரம், சாரங்கம், சிலிமுகம், சுரும்பு. (கங)
கிளியின் பெயர்:—கின்னா, சுகம், தத்தை. (ங)

### அன்னம், புறா, பருந்து இவற்றின் பெயர்கள்.

18. சிறையன்னஞ் செங்காற் பிணிமுகமஞ் சம்மீ
ருறையெகின மோதிம மாகும்—புறவாந்
துருந்துபா ராவதந் தீதில் கபோதம்
பருந்துசே னங்கங்கம் பாறு.

அன்னத்தின் பெயர்:—பிணிமுகம், அஞ்சம், எகினம், ஓதிமம்.
புறவின் பெயர்:—பாராவதம், கபோதம். (௨)
பருந்தின் பெயர்:—சேனம், கங்கம், பாறு. (௩)

### சிள்வீடு, காடை, நீர்ப்பறவை இவற்றின் பெயர்கள்.

19. சில்லிகை சில்லை செடிசிமிலி சிள்வீடு
புல்லிய காடை குறும்பூழே—சொல்விடில்
உன்னங் கிராமமு முற்குரோ சத்தினொடு
கின்னரநீர்ப் பக்கியெனக் கேள்.

சிள்வீட்டின் பெயர்:—சில்லிகை, சில்லை, செடி, சிமிலி. (௪)
காடையின் பெயர்.—குறும்பூழ். (௧)
நீர்ப்பறவையின் பெயர்:—உன்னம், கிராமம், உற்குரோசம், கின்னரம். (௪)

### சக்கரவாகம், ஊர்க்குருவி, செம்போத்து, வெண்குருகு, பூவை இவற்றின் பெயர்கள்.

20. சக்கரவா கங்கோகஞ் சக்கர நேமிப்புட்
டக்கசட கம்புலிங்க மூர்க்குருவி—குக்கிலாஞ்
செம்போத்து வெண்குருகு சாரசம் புட்கர
மம்பூவை சாரிகை யாம்.

சக்கரவாகத்தின் பெயர்:—கோகம், சக்கரம், நேமிப்புள். (௩)
ஊர்க்குருவியின் பெயர்:—சடகம், புலிங்கம். (௨)
செம்போத்தின் பெயர்:—குக்கில். (௧)
* வெண்குருகின் பெயர்:—சாரசம், புட்கரம். (௨)
† பூவையின் பெயர்:—சாரிகை. (௧)

---

* வெண்குருகு - வெண்ணாரை.
† பூவை - நாகணவாய்ப்புள்.

## கோழி, கொக்கு, போதா, ஆந்தை, காக்கை இவற்றின் பெயர்கள்.

21. குக்குடம் வாரணங் கோழிசர ணாயுதங்
கொக்குக் குரண்டம் பிதாப்போதா—பொற்ற
ணிருடிகூன் பிங்கலை யின்னா மார்ந்தை
காடங்கா கங்கொடிகாக் கை.

கோழியின் பெயர்:—குக்குடம், வாரணம், சரணாயுதம். (௩)
கொக்கின் பெயர்:—குரண்டம். (௧)
* போதாவின் பெயர்:—பிதா. (௧)
ஆந்தையின் பெயர்:—இருடி, கூன், பிங்கலை, இன்னாம். (௪)
காக்கையின் பெயர்:—காடம், காகம், கொடி. (௩)

## பாம்பின் பெயர்.

22. வெஞ்சினக் காத்திர வேயம் விடதரங்
கஞ்சுகி காகோ தரமிரும்பை—நஞ்சுமிழ்
கூடபதஞ் சக்கிரி கும்பி நசமரி
யாடும் பவனா சனம்.

காத்திரவேயம், விடதரம், கஞ்சுகி, காகோதரம், இரும்பை, கூடபதம், சக்கிரி, கும்பீநசம், அரி, பவனாசனம். (௰)

## இதுவுமது.

23. நாகம் புயங்கம் பணிகட் செவிதந்த
சூகமகிமா சுணஞ் சர்ப்பம்—போகி
யுரக மாளமே பந்நகம் பாந்த
ளரவு வியாளம்பாம் பாம்.

நாகம், புயங்கம், பணி, கட்செவி, தந்தசூகம், அகி, மாசுணம், சர்ப்பம், போகி, உரகம், மாளம், பன்னகம், பாந்தள், அரவு, வியாளம். (௧௫) ஆக (௨௫)

## பெரும்பாம்பு, நஞ்சு, பாம்பின்படம் இவற்றின் பெயர்கள்.

24. கோலவரி மாசுணம் பாந்தள் பெரும்பாம்பா
மாலங் களங்காளங் காரிவே—நீலம்

* போதா - பெருநாரை.

விடங்கடு வெங்காள நஞ்சின் பெயராம்
படம்பை விரித்த பணம்.

பெரும்பாம்பின் பெயர்:—மாசுணம், பாந்தள். (௨)

நஞ்சின் பெயர்:—ஆலம், களம், கரளம், காரி, நீலம், விடம், கடு, காளம். (௮)

பாம்பின் படத்தின் பெயர்:—பை, பணம். (௨)

இராசநாகம், கீரி, அண்டங்காக்கை, நிலாமுகி
இவற்றின் பெயர்கள்.

25. கருநா கிராசநா கங்கார் வழலை
நகுலங் கீரி தீர்வை—மருவிய
காகோல மேயண்டங் காக்கை நிலாமுகி
பாகார் சகுனமெனப் பார்.

இராசநாகத்தின் பெயர்:—கார்வழலை. (௧)
கீரியின் பெயர்:—நகுலம், தீர்வை. (௨)
அண்டங்காக்கையின் பெயர்:—காகோலம். (௧)
நிலாமுகியின் பெயர்.—சகுனம். (௧)

மீன், ஆமை, முதலை, ஞெண்டு, அட்டை, கறையான்
இவற்றின் பெயர்கள்.

26. மச்சஞ் சகுலி வகுலி சலசாமீன்
கச்சப மாமை காரா முதலை—நச்சுங்
களவன் குளிரஞெண்டு கர்க்கடக மட்டை
செளுகங் கறையான் சிதல்.

மீனின் பெயர்:—மச்சம், சகுலி, வகுலி, சலசரம். (௪)
ஆமையின் பெயர்:—கச்சபம். (௧)
முதலையின் பெயர்:—கரா. (௧)
ஞெண்டின் பெயர்:—களவன், குளிரம், கர்க்கடகம். (௩)
அட்டையின் பெயர்:—செளுகம். (௧)
கறையான் பெயர்:—சிதல். (௧)

ஆகச் செய்யுள்-௨௬.

விலங்கின் பெயர்த்தொகுதி முற்றுப்பெற்றது.

---

நான்காவது

## மரப்பெயர்த்தொகுதி.



### மரத்தின் பெயரும், படர்கொடியின் பெயரும்.

1. தருவிடபி பாதபம் பூருகஞ் சாகி
துருமமக மந்துரு சால—மாமர
மெழிலிலதை வள்ளி பிரததி யேடார்
கொழுமலர் வல்லி கொடி.

*மரத்தின் பெயர்:—தரு, விடபி, பாதபம், பூருகம், சாகி, துருமம், அகமம், துரு, சாலம்.* (௧)

*படர்கொடியின் பெயர்:—இலதை, வள்ளி, பிரததி, வல்லி.* (௨)

### சோலையின் பெயரும், காட்டின் பெயரும்.

2. வண்டமர் சோலை மலர்ப்பொழி லாராமங்
கொண்டன் மலிகாத் தருக்குழாக்—தண்டலை
கானங் ககனம் வனமடவி காந்தாரங்
கானக மாரணியங் காடு.

*சோலையின் பெயர்:—பொழில், ஆராமம், கா, தருக்குழாம், தண்டலை.* (௩)

*காட்டின் பெயர்:—கானம், ககனம், வனம், அடவி, காந்தாரம், கானகம், ஆரணியம்.* (௪)

### இலை, அரும்பு இவற்றின் பெயர்கள்.

3. தலமடை பன்னஞ் சதனம் பலாச
மிலைசதம் பத்திர மென்ப—கலிகை
முகிழ்சா லகநனை கோரகை மொட்டு
முகுள மரும்பு முகை.

*இலையின் பெயர்:—தலம், அடை, பன்னம், சதனம், பலாசம், சதம், பத்திரம்.* (௫)

*அரும்பின் பெயர்:—கலிகை, முகிழ், சாலகம், நனை, கோரகை, மொட்டு, முகுளம், முகை.* (௬)

### கிழங்கு, வேர், மரக்கப்பு, தளிர் இவற்றின் பெயர்கள்.

4. கந்தங் கிழங்குமூ லந்தூர் சடைசிவைவேர்
கொந்தலர்பூங் கொம்பு பணைகவடு—முந்திய
போங்கர் சினைசாகை கப்புமுறி பல்லவ
மங்கிசல யந்தளிர்ப்பே ராம்.

கிழங்கின் பெயர்:—கந்தம், மூலம். (௨)
வேரின் பெயர்:—தூர், சடை, சிவை. (௩)
மரக்கப்பின் பெயர்:—கொம்பு, பணை, கவடு, போங்கர், சினை, சாகை. (௬)
தளிரின் பெயர்:—முறி, பல்லவம், கிசலயம், தளிர். (௪)

### மலர், பூங்கொத்து, குலை, பழம் இவற்றின் பெயர்கள்.

5. மணமலி பூவீ மலர்போ தலராந்
துணர்மஞ் சரிகொத்துத் தொத்தோ—டிணரா
நலஞ்சேர் குலைதாறு வல்லரி யாகும்
பலங்காய் கனியாம் பழம்.

மலரின் பெயர்:—பூ, வீ, போது, அலர். (௪)
பூங்கொத்தின் பெயர்:—துணர், மஞ்சரி, தொத்து, இணர். (௪)
குலையின் பெயர்:—தாறு, வல்லரி. (௨)
பழத்தின் பெயர்:—பலம், காய், கனி. (௩)

### கதிர், தோல், விதை, முளை, முளைத்தல், குருத்து இவற்றின் பெயர்கள்.

6. கதிராங் குரல்செங் கனிமே வியதோல்
செதிளாகுங் காழ்கொட்டை செப்பில்—விதையாகும்
காலா முளைபொடித்த லங்குரித்த னாறுதல்
பாலார் குருத்துப் பயிர்.

கதிரின் பெயர்:—குரல். (௧)
தோலின் பெயர்:—செதிள். (௧)
விதையின் பெயர்:—காழ், கொட்டை (௨)
முளையின் பெயர்:—கால். (௧)
முளைத்தலின் பெயர்:—பொடித்தல், அங்குரித்தல், நாறுதல். (௩)
குருத்தின் பெயர்:—பயிர். (௧)

### வாசனையின் பெயரும், கள்ளின் பெயரும்.

7. வெறிகடி வாசம் விரைமணங்கான் கந்தம்
நறைமன்ற லேமுருகு நாற்றம்—பொறிவண்டார்
கட்டண்டேன் வேரி பிரச நறுநறவு
மட்டுமக ரந்த மது.

*வாசனையின் பெயர்:--வெறி, கடி, வாசம், விரை, மணம், கான், கந்தம், நறை, மன்றல், முருகு, நாற்றம்.* (கக)

*கள்ளின் பெயர்:—தேன், வேரி, பிரசம், நறா, நறவு, மட்டு, மகரந்தம், மது.* (அ)

### நொச்சி, குளநெல், கோரை, களா, செங்நெல், கரும்பு இவற்றின் பெயர்கள்.

8. வளர்நொச்சி யாஞ்சிந்து வாரநீ வாரங்
குளநெல் லெருவைசாய் கோரை—களங்களா
செந்நெல் விரிகியொடு செஞ்சாலி வேழம்பைங்
கன்னல்கழை யிக்குக் கரும்பு.

*நொச்சியின் பெயர்:—சிந்துவாரம்.* (க)
*குளநெல்லின் பெயர்:—நீவாரம்.* (க)
*கோரையின் பெயர்:—எருவை, சாய்.* (உ)
*களாவின் பெயர்:—களம்.* (க)
*செந்நெல்லின் பெயர்:—விரீகி, செஞ்சாலி.* (உ)
*கரும்பின் பெயர்:—வேழம், கன்னல், கழை, இக்கு.* (ச)

### எருக்கு, ஆத்தி, முண்முருக்கு, குருக்கத்திக்கொடி, வேம்பு, மகிழ், பாதிரி இவற்றின் பெயர்கள்.

9. அருக்க மெருக்காகுந் தாதகியா ராத்தி
முருக்குக் கவிர்கிஞ் சுகமாங்—குருக்கத்தி
மாதவி நிம்பமாம் வேம்பு மகிழ்வகுளம்
பாதிரியா கும்பா டலம்.

*எருக்கின் பெயர்:—அருக்கம்.* (க)
*ஆத்தியின் பெயர்:—தாதகி, ஆர்.* (உ)
*முண்முருக்கின் பெயர்:—கவிர், கிஞ்சுகம்.* (உ)
*குருக்கத்திக்கொடியின் பெயர்:—மாதவி.* (க)
*வேம்பின் பெயர்:—நிம்பம்.* (க)

மகிழின் பெயர்:—வகுளம். (க)
பாதிரியின் பெயர்:—பாடலம். (க)

அரசு, மருது, மா, பலா, சுரபுன்னை, மாதுளை
இவற்றின் பெயர்கள்.

10. அரசு திருமரம் பிப்பலம் போதி
மருத மருச்சுனமா கொக்கு—விரையாருஞ்
சூதம் பனசம் பலாசுர புன்னைவழை
மாதுளுங்க மாமா துளை.

அரசின் பெயர்:—திருமரம், பிப்பலம், போதி. (௩)
மருதமரத்தின் பெயர்:—அருச்சனம். (க)
மாமரத்தின் பெயர்:—கொக்கு, சூதம். (௨)
பலாமரத்தின் பெயர்:—பனசம். (க)
சுரபுன்னையின் பெயர்:—வழை. (க)
மாதுளையின் பெயர்:—மாதுளுங்கம். (க)

பனை, நாவல், கடம்பு, கமுகு, புன்னை, ஆச்சா,
தேக்கு இவற்றின் பெயர்கள்.

11. கடம்பெண்ணை தாலம் பனைசம்பு நாவல்
கடம்பாகு நீபங் கதம்ப—நெடுங்கமுகு
பூகமாம் புன்னாகம் புன்னையா வாச்சாவாஞ்
சாகமாந் தேக்கந் தரு.

பனையின் பெயர்:—பெண்ணை, தாலம். (௨)
நாவலின் பெயர்:—சம்பு. (க)
கடம்பின் பெயர்:—நீபம், கதம்பம். (௨)
கமுகின் பெயர்:—பூகம். (க)
புன்னையின் பெயர்:—புன்னாகம். (க)
ஆச்சாவின் பெயர்:—ஆ. (க)
தேக்கமரத்தின் பெயர்:—சாகம். (க)

தெங்கு, வாழை, தாழை, கொன்றை, கோங்கு
இவற்றின் பெயர்கள்.

12. தாழைதென் னாளிகேரந்தெங்கு தண்கதலி
வாழை யரம்பை மடிகைதை—தாழை

*சொழுங்கே தகைதிதழி தெங்கடுக்கை கொன்றை*
*கொழுங்கன்னி காரமாங் கோங்கு.*

*தெங்கின் பெயர்:—தாழை, தெங், நாளிகேரம்.* (௩)
*வாழையின் பெயர்:—கதலி, அரம்பை.* (௨)
*தாழையின் பெயர்:—மடி, கைதை, கேதகை.* (௩)
*கொன்றையின் பெயர்:—இதழி, கடுக்கை.* (௨)
*கோங்கின் பெயர்:—கன்னிகாரம்.* (௧)

அகில், அத்தி, புன்கு, இலவு, ஈந்து, அலரி இவற்றின் பெயர்கள்.

**13.** *அகரு வகிலதவு தும்பர மத்தி*
*தருநத்தங் காஞ்சனம் புன்கு—கேசரி*
*யிலவாகுஞ் சான்மலி கர்ச்சூர மீந்தா*
*மலரி கரவீர மாம்.*

*அகிலின் பெயர்:—அகரு.* (௧)
*அத்தியின் பெயர்:—அதவு, உதும்பரம்.* (௨)
*புன்கின் பெயர்:—நத்தம், காஞ்சனம்.* (௨)
*இலவின் பெயர்:—சான்மலி.* (௧)
*ஈந்தின் பெயர்:—கர்ச்சூரம்.* (௧)
*அலரியின் பெயர்:—கரவீரம்.* (௧)

பலாசம், அசோகு, குருந்து, வெட்பாலை, சந்தனம் இவற்றின் பெயர்கள்.

**14.** *பிரம தருவாம் பலாசஞ் செயலை*
*யரிமருவு பிண்டி யசோகு—விரிமலர்க்*
*குந்தங் குருந்தங் குடசமாம் வெட்பாலை*
*சந்தனமா ரஞ்சந்தஞ் சாந்து.*

*பலாசத்தின் பெயர்:—பிரமதரு.* (௧)
*அசோகின் பெயர்:—செயலை, பிண்டி.* (௨)
*குருந்தத்தின் பெயர்:—குந்தம்.* (௧)
*வெட்பாலையின் பெயர்:—குடசம்.* (௧)
*சந்தனத்தின் பெயர்:—ஆரம், சந்தம், சாந்து.* (௩)

கடு, நெல்லி, தான்றி, வில்வம், விளா, ஆல், அழிஞ்சில் இவற்றின் பெயர்கள்.

**15.** *நல்ல கடுவா மரிதகி யாமலக*
*நெல்லியாந் தான்றி கலித்துருமம்—வில்லுவ*

மாலூரங் கூவிளை வெள்ளில் விளாவட
மாலழிஞ்சி லங்கோல மாம்.

கடுமரத்தின் பெயர்:—அரிதகி. (க)
நெல்லியின் பெயர்:—ஆமலகம். (க)
தான்றியின் பெயர்:—கலித்துருமம். (க)
வில்வத்தின் பெயர்:—மாலூரம், கூவிளை. (உ)
விளாவின் பெயர்:—வெள்ளில். (க)
ஆலமரத்தின் பெயர்:—வடம். (க)
அழிஞ்சிலின் பெயர்:—அங்கோலம். (க)

### தேவதாரு, குரா, மரா, வஞ்சி, ஏலம் இவற்றின் பெயர்கள்.

16. சுரதுரு மந்தேவ தாருத் துணர்ப்பூங்
குராமரா மாங்கோவி தார—மராமராஞ்
சாலம்வா னீரந் தளிர்வஞ் சுளம்வஞ்சி
யேலமா மென்பர் துடி.

தேவதாருவின் பெயர்:—சுரதுருமம். (க)
குராவின் பெயர்:—கோவிதாரம். (க)
மராமரத்தின் பெயர்:—சாலம். (க)
வஞ்சியின் பெயர்:—வானீரம், வஞ்சனம். (உ)
ஏலத்தின் பெயர்:—துடி. (க)

### இஞ்சி, மிளகு, திப்பிலி, அதிமதூரம், இருப்பை, காயா இவற்றின் பெயர்கள்.

17. காமலி யார்த்திரக மிஞ்சி கறிமரீச
மாமிளகு திப்பிலி மாகதியாந்—தேமதுகம்
யட்டி மதூர மதூக மிருப்பையாங்
கட்டரும் பூவைகா யா.

இஞ்சியின் பெயர்:—ஆர்த்திரகம். (க)
மிளகின் பெயர்:—கறி, மரீசம். (உ)
திப்பிலியின் பெயர்:—மாகதி. (க)
அதிமதூரத்தின் பெயர்:—மதுகம், யட்டி. (உ)
இருப்பையின் பெயர்:—மதூகம். (க)
காயாவின் பெயர்:—பூவை. (க)

### மல்லிகை, சிறுசண்பகம், இருவாட்சி, மௌவல், வாடாக்குறிஞ்சி, அவுரி இவற்றின் பெயர்கள்.

18. *மல்லிகையாம் பூருண்டி சண்பகம் பித்திகை*
*யெல்லினர்ச் சாதி யிருவாட்சி—நல்லரங்க*
*மாலதி * மௌவல் சகசரி யாங்குறிஞ்சி*
*நீலி நிகழவுரி யாம்.*

*மல்லிகையின் பெயர்:—பூருண்டி.* (௧)
*சிறுசண்பகத்தின் பெயர்:—பித்திகை, சாதி.* (௨)
*இருவாட்சியின் பெயர்:—அரங்கம்.* (௧)
*மௌவலின் பெயர்:—மாலதி.* (௧)
*வாடாக்குறிஞ்சியின் பெயர்:—சகசரி.* (௧)
*அவுரியின் பெயர்:—நீலி.* (௧)

### மூங்கிலின் பெயர்.

19. *கிளைவேணு வேரலமை கீசகம் விண்டு*
*மூலையரிகண் சந்திபணை மூங்கில்—கிளைவரைவேய்*
*தூம்புவெதிர் தட்டையம்பு முந்தூழ் துளையோங்கல்*
*காம்பு திகிரி கழை.*

*கிளை, வேணு, வேரல், அமை, கீசகம், விண்டு, மூலை, அரி, கண், சந்தி, பணை, வரை, வேய், தூம்பு, வெதிர், தட்டை, அம்பு, முந்தூழ், துளை, ஓங்கல், காம்பு, திகிரி, கழை.* (௨௩)

### வள்ளை, சேம்பு, வெள்ளாம்பல், செங்குவளை, கருங்குவளை இவற்றின் பெயர்கள்.

20. *செழுநாளி கம்வள்ளை சேம்பு சகுடங்*
*கொழுமல ராம்பல் குமுதங்—கழுநீராஞ்*
*செங்குவளை யுற்பல மிந்தீ வரநீலம்*
*பைங்குவளை நீலோற் பலம்.*

*வள்ளையின் பெயர்:—நாளிகம்.* (௧)
*சேம்பின் பெயர்:—சகுடம்.* (௧)
*வெள்ளாம்பலின் பெயர்:—குமுதம்.* (௧)
*செங்குவளையின் பெயர்:—கழுநீர், உற்பலம்.* (௨)
*கருங்குவளையின் பெயர்:—இந்தீவரம், நீலம், நீலோற்பலம்.* (௩)

---

* மௌவல் - ஊசிமல்லிகை.

நந்தியாவர்த்தம், கொவ்வை, செவ்வரத்தை இவற்றின் பெயர்கள்.

21. வலம்புரி நந்தியா வர்த்தமே யாகும்
குலம்பொலி யாதொண்டை கொவ்வை—நலஞ்சேரும்
விண்டபூஞ் செவ்வரத்தை மேவிய மந்தாரங்
கொண்டபே ராகுங் குறி.

நந்தியாவர்த்தத்தின் பெயர்:—வலம்புரி. (க)
கொவ்வையின் பெயர்:—ஆதொண்டை. (௧)
செவ்வரத்தையின் பெயர்:—மந்தாரம். (௧)

தாமரையின் பெயர்.

22. மூண்டக மம்புய மம்போ ருகமுளரி
வண்டா மனாவனசம் வாரிசம்—புண்டரிகம்
பங்கயங் கஞ்சம் பதும மரவிந்த
மங்கமலங் கோகநக மாம்.

மூண்டகம், அம்புயம், அம்போருகம், முளரி, வனசம், வாரிசம், புண்டரிகம், பங்கயம், கஞ்சம், பதுமம், அரவிந்தம், கமலம், கோகநகம். (கூ)

ஆகச் செய்யுள்-கக.

மரப்பெயர்த்தொகுதி முற்றுப்பெற்றது.

---

ஐந்தாவது

## இடப்பெயர்த்தொகுதி.

இடத்தின்பெயர்.

1. கடைதலை கான்மருங்கு கண்மா டுழைமேல்
புடைவலந் தாமம் புறங்கீ—ழிடைவயின்வாய்
பின்னய லுள்ளில் பதிதானஞ் சார்வுளி
முன்னக முற்று மிடம்.

கடை, தலை, கால், மருங்கு, கண், மாடு, உழை, மேல், புடை, வலம், தாமம், புறம், கீழ், இடை, வயின், வாய், பின், அயல், உள், இல், பதி, தானம், சார்வு, உளி, முன், அகம். (உக)

## பூமியின் பெயர்.

2. அவனி பொழில்பா ரகலிடம் வையம்
புவனி புவிபுடவி பூமி—குவலய
ஞாலந் தரைதா ரிணிகா சினிபடி
தாலந் தரணி தலம்.

அவனி, பொழில், பார், அகலிடம், வையம், புவனி, புவி, புடவி, குவலயம், ஞாலம், தரை, தாரிணி, காசினி, படி, தாலம், தரணி, தலம். (௧௭)

## இதுவுமது.

3. வசுந்தரை பூவுலகு மண்குநில நேமி
வசுமதி சாந்தை வசுதை—யசலை
யுகமே நகந்தறை கோவே விபுலை
சகமே தினிதாத் திரி.

வசுந்தரை, பூ, உலகு, மண், கு, நிலம், நேமி, வசுமதி, சாந்தை, வசுதை, அசலை, உகம், நகம், தறை, கோ, விபுலை, சகம், மேதினி, தாத்திரி. (௧௧) ஆக (௨௯)

## மலையின் பெயர்.

4. வரைகிரி யோங்கல் குவடு மலைபூ
தரமசலங் குன்று சயிலங்—கிரிகல்
சிலம்பு பொருப்புச் சிகரி யடுக்கல்
விலங்கல் சிலைபிறங்கல் வெற்பு.

வரை, கிரி, ஓங்கல், குவடு, பூதரம், அசலம், குன்று, சயிலம், கிரி, கல், சிலம்பு, பொருப்பு, சிகரி, அடுக்கல், விலங்கல், சிலை, பிறங்கல், வெற்பு. (௧௮)

## இதுவுமது.

5. இரவி பருப்பதம் விண்டு நகமா
திரமோ திமமிறும்பு நாகந்—தாரதாந்
குத்திரம் பொற்றை சிலோச்சயங் கோத்திர
மத்திரி வேதண்ட மாம்.

இரவி, பருப்பதம், விண்டு, நகம், மாதிரம், ஓதிமம், இறும்பு, நாகம், தாரதாம், குத்திரம், பொற்றை, சிலோச்சயம், கோத்திரம், அத்திரி, வேதண்டம். (௧௫) ஆக (௩௩)

### கயிலாயம், மேரு இவற்றின் பெயர்கள்.

6. சயிலாதி வெள்ளியங் குன்றந்தண் சோலைக்
கயிலாயங் கண்ணுதலோன் வெற்பு—அயிலாதா
சாலயம் பொன்னசல மேரு வமரர்க்காய்
வேலைவிட முண்டான்கை வில்.

கயிலாயத்தின் பெயர்:—சயிலாதி, வெள்ளிமலை, கண்ணுதலோன் வெற்பு. (௩)

மேருமலையின் பெயர்:—சாலயம், பொன்னசலம், சிவன்கைவில். (௩)

### இமயம், பொதிகை இவற்றின் பெயர்கள்.

7. இமவான் மலையரைய னெம்மிறைவன் பாகத்
துமையாளைப் பெற்ற வுரவோன்—இமயப்
பொதிய மலைமலயந் தென்மலைபூ மிக்கு
மதிதமிழை யீந்தான் மலை.

இமயமலையின் பெயர்:—இமவான், மலையரையன், உமையாளைப் பெற்றவன். (௩)

பொதியமலையின் பெயர்:—மலயம், தென்மலை, * தமிழீந்தான் மலை. (௩)

### சமுத்திரத்தின் பெயர்.

8. நீர்புணரி நேமி பரவைவே லாவலய
மார்கலி யத்தி திரைகாலை—வாரிதி
பாராவா ரம்பௌவம் வேலைமுந் நீருவரி
காராழி வாரி கடல்.

நீர், புணரி, நேமி, பரவை, வேலாவலயம், ஆர்கலி, அத்தி, திரை, காலை, வாரிதி, பாராவாரம், பௌவம், வேலை, முந்நீர், உவரி, ஆழி, வாரி, கடல். (௧௮)

### இதுவுமது.

9. சலராசி தோயநிதி யம்பா முப்புச்
சலநிதி யேயுததி சிந்து—சலதி
யளப்பரும் வெள்ள நதிபதி வீரை
யளக்கர் சமுத்திர மாம்.

* தமிழீந்தான் = அகத்தியன்.

சலராசி, தோயநிதி, அம்பரம், உப்பு, சலநிதி, உததி, சிந்து, சலதி,
வெள்ளம், நதிபதி, வீரை, அளக்கர். (௪௨) ஆக (௬௦)

## கரை, கடற்றிரை, நீர்க்குமிழி, நீர்நுரை இவற்றின் பெயர்கள்.

10. கூலம்பா ரந்தீரங் கோடு தடங்கரைகல்
லோலந் தரங்க மலைதிரை—வேலையிற்
றங்குங் குமிழியே புற்புதமா கும்பேனம்
பொங்குநுரை யென்றே புகல்.

கரையின் பெயர்:—கூலம், பாரம், தீரம், கோடு, தடம். (௫)
கடற்றிரையின் பெயர்:—கல்லோலம், தரங்கம், அலை. (௩)
நீர்க்குமிழியின் பெயர்:—புற்புதம். (௧)
நீர்நுரையின் பெயர்:—பேனம். (௧)

## ஐவகை நிலம், மேடு, பள்ளம் இவற்றின் பெயர்கள்.

11. மொய்குறிஞ்சி வன்பாலை முல்லை செழுமருத
நெய்தலிவை யைந்து நிலனாகு—மைதீர்
நிவப்பு மிசைமீது மேடுயர மாகு
மவல்பயம்பு பள்ளந்தாழ் வாம்.

ஐவகை நிலத்தின் பெயர்:—குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல். (௫)
மேட்டின் பெயர்:—நிவப்பு, மிசை, மீது, உயரம். (௪)
பள்ளத்தின் பெயர்:—அவல், பயம்பு, தாழ்வு. (௩)

## கிணறு, வயல், வரம்பு, வரம்பின்பக்கம், களர்நிலம் இவற்றின் பெயர்கள்.

12. செழுநீர்க் கிணறாகுங் கூவல் செறுச்செய்
கழனி பழனம் வயலாம்—பழுதில்
வரம்பா மரீசி வரம்பருகாங் கங்கு
காம்புவ ராகுங் களர்.

கிணற்றின் பெயர்:—கூவல். (௧)
வயலின் பெயர்:—செறு, செய், கழனி, பழனம். (௪)
வரம்பின் பெயர்:—மரீசி. (௧)
வரம்பின் பக்கத்தின் பெயர்:—கங்கு. (௧)
களர்நிலத்தின் பெயர்:—காம்பு, உவர். (௨)

சுடுகாடு, மட்கலஞ்சுடுபூமி; நிலப்பிளப்பு இவற்றின் பெயர்கள்.

13. ஈம மயானஞ் சுடலை சுடுகாடு
ஆமயிரு கன்னையாக் தொல்குபவர்—தாமட்
கலஞ்சுடு பூமி கமருஞ் விடரு
நிலம்பிளந்த தென்றே நிகழ்த்து.

சுடுகாட்டின் பெயர்:—ஈமம், மயானம், சுடலை. (௩)
மட்கலஞ் சுடுபூமியின் பெயர்:—கன்னை. (௧)
நிலப்பிளப்பின் பெயர்:—கமர், விடர். (௨)

தூர்க்கம், கற்கணெருங்குமிடம், வெளியிடம், பக்கம், நடு இவற்றின் பெயர்கள்.

14.* தூர்க்கமருப் பஞ்சென்று துன்னற் கரியவிடங்
கற்க ணெருங்கு மிடமுரம்பா—நிற்குமொரு
வெள்ளிடை யாகும் வெளிமருங்கு பக்கமா
நள்ளிடை நாப்ப ணடு.

தூர்க்கத்தின் பெயர்:—அருப்பம், செலற்கரியவிடம். (௨)
கற்கணெருங்குமிடத்தின் பெயர்:—முரம்பு. (௧)
வெளியிடத்தின் பெயர்:—வெள்ளிடை. (௧)
பக்கத்தின் பெயர்:—மருங்கு. (௧)
நடுவின் பெயர்:—நள், இடை, நாப்பண். (௩)

நாகலோகம், நரகம் இவற்றின் பெயர்கள்.

15. வடவா முகந்தாம் பிலங்கீ ழுலோகம்
படநாக லோகம்பா தாளங்—கொடிய
விருளந்த காரந் துவாந்தந் திமிர
நரகு நிரயநர கம்.

நாகலோகத்தின் பெயர்:—வடவாமுகம், பிலம், கீழுலோகம், பாதாளம். (௪)
நரகத்தின் பெயர்:—இருள், அந்தகாரம், துவாந்தம், திமிரம், நரகு, நிரயம். (௬)

வழியின் பெயர்.

16. அதர்நெறி பந்தஞ் செலவொழுக் காறு
வதியிருவை மார்க்கம் வகுர்து—பதவை

* தூர்க்கம் - கோட்டை.

அம்பலத்தின் பெயர்:—பொதுவில், மன்றம். (௨)
நிலைமுற்றத்தின் பெயர்:—அரமியம். (௧)
குதிரைப்பந்தியின் பெயர்:—மந்திரம். (௧)
மடைப்பள்ளியின் பெயர்:—அடுக்களை. (௧)
யானைக்கூடத்தின் பெயர்:—சேவகம். (௧)

### வீடு, திண்ணை, முற்றம் இவற்றின் பெயர்கள்.

20. நகர்மா ளிகைகுல மாடம் பவன
மகமனை வீடுபுக்கி லில்லம்—புகலலர்
தென்றலார் வேதிகை திண்ணையா மங்கணமு
முன்றிலு முற்றமே யாம்.

வீட்டின் பெயர்:—நகர், மாளிகை, குலம், மாடம், பவனம், அகம், மனை, புக்கில், இல்லம் (௯)
திண்ணையின் பெயர்:—வேதிகை. (௧)
முற்றத்தின் பெயர்:—அங்கணம், முன்றில். (௨)

### தடாகத்தின் பெயர்.

21. இலஞ்சி கயங்கேணி கோட்டக மேரி
மலங்கன் மடுவோடை வாவி—சலந்தரம்
வட்டந் தடாக கன்னி மடுப்பொய்கை
குட்டங் கிடங்கு குளம்.

இலஞ்சி, கயம், கேணி, கோட்டகம், ஏரி, மலங்கல், மடு, ஓடை, வாவி, சலந்தரம், வட்டம், கன்னி, மடு, பொய்கை, குட்டம், கிடங்கு, குளம். (௧௭)

### போர்க்களத்தின் பெயர்.

22 அடுகள மிக்க வமர்க்களம் வெய்ய
படுகளஞ் செங்களம் பற்றார்—முடுகிய
போர்க்கள மாகவ பூமி புலால்கவர்புள்
ளார்க்கும் பறந்தலை யாம்.

அடுகளம், அமர்க்களம், படுகளம், செங்களம், ஆகவபூமி, பறந்தலை. (௬)

ஆகச் செய்யுள்-௨௰௨.

இடப்பெயர்த்தொகுதி முற்றுப்பெற்றது.

---

௧௧வது

# பல்பொருட்பெயர்த்தொகுதி.

## பொன்னின் பெயர்.

1. மாசை யரிபீத மாடகா ணம்பொலந்
தேசிகமீ கையா டகஞ்சொன்னம்—பேசு
நிதியருத்தம் வித்த நிதானம் வெறுக்கை
பொதிதன மிக்க பொருள்.

மாசை, அரி, பீதம், மாடு, காணம், பொலம், தேசிகம், ஈகை, ஆடகம், சொன்னம், நிதி, அருத்தம், வித்தம், நிதானம், வெறுக்கை, தனம், பொருள். (௧௭)

## இதுவுமது.

2. சாமீ கரஞ்சாத ரூபந் தமனிய
மாமாடை மாழைசாம் பூநத—மேமங்
கனக மிரணியங் காஞ்சன மீழம்
புனைபூரி சந்திரம் பொன்.

சாமீகரம், சாதரூபம், தமனியம், மாடை, மாழை, சாம்பூநதம், ஏமம், கனகம், இரணியம், காஞ்சனம், ஈழம், பூரி, சந்திரம். (௧௩)
ஆக (௩௦)

## வெள்ளி, செம்பு, பித்தளை, வெண்கலம் இவற்றின் பெயர்கள்.

3. தார மிரசதம் வெள்ளி களதவுதந்
தேறி யுதும்பரந் தாமிரம்—பேர்செம்பா
மாரகூ டம்மிரதி பித்தளைமா யாபுரி
யாரும்வெண் கலங்கஞ்ச மாம்.

வெள்ளியின் பெயர்:—தாரம், இரசதம், களதவுதம். (௩)
செம்பின் பெயர்:—உதும்பரம், தாமிரம். (௨)
பித்தளையின் பெயர்:—ஆரகூடம், இரதி, மாயாபுரி. (௩)
வெண்கலத்தின் பெயர்:—கஞ்சம். (௧)

## இரும்பு, காரீயம், ஈயம், புதையல், செல்வம் இவற்றின் பெயர்கள்.

4. கருந்தா தயமிரும்பு காரீய நாகந்
திருந்துவங் கஞ்சிரு வீயம்—பெருந்தனையிற்

புல்லியநிக் கேபம் புதையலா கும்பூதி
செல்வம் விபவந் திரு.

இரும்பின் பெயர்:—கருக்காந்தம், அயம். (௨)
காரீயத்தின் பெயர்: நாகம் (௧)
ஈயத்தின் பெயர்:—வங்கம், சீசம். (௨)
புதையலின் பெயர்:—நிக்கேபம். (௧)
செல்வத்தின் பெயர்:- பூதி, விபவம், திரு. (௩)

சங்கு, முத்து, பவளம் இவற்றின் பெயர்கள்.

5. வலம்புரி கோடு வளைகம்பு நந்துச்
சலஞ்சலஞ் சங்கு பணிலம்—நிலவிய
நித்திலமுத் தாரந் தாளந் துகிர்துப்பு
வித்துருமம் விற்பவள மாம்.

சங்கின் பெயர்:—வலம்புரி, கோடு, வளை, கம்பு, நந்து, சலஞ்சலம், பணிலம். (௭)
முத்தின் பெயர்:—நித்திலம், ஆரம், தாளம். (௩)
பவளத்தின் பெயர்:—துகிர், துப்பு, வித்துருமம். (௩)

நவமணியின் பெயர்.

6. மாணிக்க முத்து மரகத நீலமணி
பேணும் வயிடூரி யம்வைரம்—பூணும்
பவளங் கோமேத கம்புருட ராகம்
நவமணியி னுமங்க ளாம்.

மாணிக்கம், முத்து, மரகதம், நீலமணி, வயிடூரியம், வைரம், பவளம், கோமேதகம், புருடராகம். (௯)

சோற்றின் பெயர்.

7. உன்னயினி சொன்றி யுணவசனம் போசன
கன்னருணை வோதனம் போனக—மன்ன
மடைகிமிர் தல்மூரல் புழுக்கல் பதங்கூ
முடிசில் சருப்புகா சோறு.

அயினி, சொன்றி, உணா, அசனம், போசனம், உணவு, ஓதனம், போனகம், அன்னம், மடை, கிமிர்தல், மூரல், புழுக்கல், பதம், கூழ், அடிசில், சரு, புகா. (௧௮)

ஆகச் செய்யுள்-௧௪௦.

பல்பொருட்பெயர்த்தொகுதி முற்றுப்பெற்றது.

ஏழாவது

# செயற்கைவடிவின்பெயர்த்தொகுதி.

## வில், அம்பு இவற்றின் பெயர்கள்.

1. கார்முகங்கோ தண்டம் தனுவிற் கொடுமரம்
வார்சிலை சாபஞ் சராசனம்—கூர்வாளி
யொப்பகழி கோப்பல்லம் பாணங் கசங்காண்ட
மம்புகணை கோல்சரமே யாம்.

வில்லின் பெயர்:—கார்முகம், கோதண்டம், தனு, கொடுமரம், சிலை, சாபம், சராசனம். (௭)

அம்பின் பெயர்:—வாளி, பகழி, கோ, பல்லம், பாணம், கசம், காண்டம், கணை, கோல், சரம். (௧௦)

2. சித்திரப் புங்கஞ் சிலீமுக மேகங்க
பத்திர மார்க்கணந் தோணியா—மத்திரம்
வெய்ய விசிகமே யாசுகஞ் சாயக
மெய்யுங் கதிரமென லாம்.

புங்கம், சிலீமுகம், ஏ, கங்கபத்திரம், மார்க்கணம், தோணி, அத்திரம், விசிகம், ஆசுகம், சாயகம், கதிரம். (௧௧) ஆக (௨௧)

## சூலம், மழு, சக்கரம், வச்சிரம், வாள் இவற்றின் பெயர்கள்.

3. முக்குடுமி வேல்சூல மாம்பரசு மொய்கணிச்சி
மிக்க மழுவாழி நேமிவளை—சக்கரமாம்
வெங்குலிசம் பேரசனி வச்சிர நாந்தகம்வா
ளங்கரவா ளங்கட்க மாம்.

சூலத்தின் பெயர்:—முத்தலைவேல். (௧)
மழுவின் பெயர்:—பரசு, கணிச்சி. (௨)
சக்கரத்தின் பெயர்:—ஆழி, நேமி, வளை. (௩)
வச்சிரத்தின் பெயர்:—குலிசம், அசனி. (௨)
வாளின் பெயர்:—நாந்தகம், கரவாளம், கட்கம். (௩)

## வேலாயுதம், தண்டு, ஈர்வாள், கைவேல் இவற்றின் பெயர்கள்.

4. ஓங்கயில் சத்தி யுடம்பிடிவே லெஃகந்
தாங்கு மொருகதை தண்டீர்வா—ளோங்கு

காபத் திரம்வே தினங்கப் பணந்தோ
மரமேகை வேல்விகற்ப மாம்.

வேலாயுதத்தின் பெயர்:—அயில், சத்தி, உடம்பிடி, எஃகம். (௪)
தண்டின் பெயர்:—கதை. (௧)
ஈர்வாளின் பெயர்:—காபத்திரம், வேதினம். (௨)
கைவேலின் பெயர்:—கப்பணம், தோமரம். (௨)

தாழ், பரண், ஊஞ்சல், உரல், கலப்பை இவற்றின் பெயர்கள்.

5. கதவிற் செறிக்குந்தாழ் சிப்பாகுங் காவ
லிதணங் கழுதுபரா ணென்ப—ருதைந்தாடு
மூஞ்சலா மூச லுலூகல மென்பதுரல்
ஞாஞ்சி லலங்கலப்பை நாட்டு.

தாழின் பெயர்:—சிப்பு. (௧)
பரணின் பெயர்:—காவல், இதணம், கழுது. (௩)
ஊஞ்சலின் பெயர்:—ஊசல். (௧)
உரலின் பெயர்:—உலூகலம். (௧)
கலப்பையின் பெயர்:—ஞாஞ்சில், அலம். (௨)

சேலையின் பெயர்.

6. மடி துகில் கோசிகங் காழகஞ் சேலை
புடைவை கலிங் கந்தானை தூசு—படமாடை
புட்ட மறுவை புனைசாடி யம்பரம்
பட்டுடை கூறை படாம்.

மடி, துகில், கோசிகம், காழகம், புடைவை, கலிங்கம், தானை, தூசு, படம், ஆடை, புட்டம், அறுவை, புனை, சாடி, அம்பரம், பட்டு, உடை, கூறை, படாம். (௧௯)

மாலையின் பெயர்.

7. தொங்கல் பிணைய றொடைவண்டு சூழணிய
லங்கண்ணி செந்தேன் மலியலங்கல்—பைங்கோதை
தேம றொலிய றெரிய லிலம்பகம்பூந்
தாம மொளிர்மாலை தார்.

தொங்கல், பிணையல், தொடை, அணியல், கண்ணி, அலங்கல், கோதை, ஒலியல், தெரியல், இலம்பகம், தாமம், தார். (௧௨)

## தோளணி, மோதிரம், மேகலாபரணம், மணிவடம் இவற்றின் பெயர்கள்.

8. *கேயூர மங்கதந் தோளணி யாமென்பர்*
*தூய மணியாழி மோதிரஞ்—சேயொளி*
*சேருங் கலாபஞ் செறிமே கலைகாஞ்சி*
*யார மணிவடங்கா ழாம்.*

*தோளணியின் பெயர்:—கேயூரம், அங்கதம்.* (உ)
*மோதிரத்தின் பெயர்:—ஆழி.* (௧)
*மேகலாபரணத்தின் பெயர்:—கலாபம், காஞ்சி.* (உ)
*மணிவடத்தின் பெயர்:—ஆரம், காழ்.* (உ)

## ஆபரணம், கிரீடம், கங்கணம், குண்டலம் இவற்றின் பெயர்கள்.

9. *அணியிழை பூண்கல னாபரண மாகு*
*மணிமகுட மௌலி கிரீட—மணிமுடியாங்*
*கங்கண மாகுங் கடகந் தொடிவளை*
*யங்குழை குண்டலந்தோ டாம்.*

*ஆபரணத்தின் பெயர்:—அணி, இழை, பூண், கலன்.* (௪)
*கிரீடத்தின் பெயர்:—மகுடம், மௌலி, முடி.* (௩)
*கங்கணத்தின் பெயர்:—கடகம், தொடி, வளை.* (௩)
*குண்டலத்தின் பெயர்:—குழை, தோடு.* (உ)

## காற்சிலம்பு, பரியகம், சதங்கை, பாடகம் இவற்றின் பெயர்கள்.

10. *பரிபுர நூபுரம் பைம்பொன் ஞெகிழி*
*யரிபெய் சிலம்பின் பெயராம்—* பரியகம்*
*பாதசா லம்புலம்பு கிங்கிணி யாஞ்சதங்கை*
*பாதகட கம்பாட கம்.*

*காற்சிலம்பின் பெயர்:—பரிபுரம், நூபுரம், ஞெகிழி.* (௩)
*பரியகத்தின் பெயர்:—பாதசாலம்.* (௧)
*சதங்கையின் பெயர்:—கிங்கிணி.* (௧)
*பாடகத்தின் பெயர்:—பாதகடகம்.* (௧)

---

* பரியகம் - காலணியில் ஒருவகை.

கருமையின் பெயர்:—கறை, அசிதம், காழகம், காளம், இருள், நீலம், சாமளம், சாமம். (௮)

செப்பின் பெயர்:—அருணம், அரத்தம், சோணம், உலோகிதம், அஞ்சிட்டம், பாடலம், பூவல். (௯)

பச்சை, பொன்னிறம், புகர்நிறம், கபிலநிறம் ன் பெயர்கள்.

3. அரித்துப் பலாச மரிதமரி பச்சை
யரித்திரா பம்பீதம் பொன்மை—தரித்த
புகர்நிறம் புன்மையாம் போற்றுங் குராலை
நிகரில் கபில நிறம்.

பச்சையின் பெயர்:—அரித்து, பலாசம், அரிதம், அரி. (௧)
பொன்னிறத்தின் பெயர்:—அரித்திராபம், பீதம். (௨)
புகர்நிறத்தின் பெயர்:—புன்மை. (௩)
கபிலநிறத்தின் பெயர்:—குரால். (௪)

ஒளிர்தல், ஒளி இவற்றின் பெயர்கள்.

4. இலங்குதன் மின்ன லொளிர்த னிலவ
றுலக்கல் விளக்க றுளக்க—லலக்கொள்
படரொளி தேசு இளர்கதிரெல் வில்வான்
சுடர்விரியல் சோதியெனச் சொல்.

ஒளிர்தலின் பெயர்:—இலங்குதல், மின்னல், நிலவல், துலக்கல், விளக்கல், துளக்கல். (௧)

ஒளியின் பெயர்—தேசு, இளர், கதிர், எல், வில், வான், சுடர், விரியல், சோதி. (௨)

அன்பு, இளமை இவற்றின் பெயர்கள்.

5. ஈரமு நேயமுங் காதலுங் காமமு
மார்வமு மிட்டமு மன்பிற்குப்—போரங்
குழவுந் தருணமுங் கோமளமு காரு
மெழிலு மழவுமிள மை.

அன்பின் பெயர்:—ஈரம், நேயம், காதல், காமம், ஆர்வம், இட்டம். (௧)

இளமையின் பெயர்:—குழவு, தருணம், கோமளம், காரு, எழில், மழவு. (௨)

### அழகின்பெயர்.

6. ஆரிய மனோகரங் காந்த மணிசோபங்
காரிகை பூவனப்புக் கந்தர—மேரெழில்
வாமமியா ணர்மாமை வாகு தகைகவினி
ராமமபி ராமமழ காம்.

ஆரியம், மனோகரம், காந்தம், அணி, சோபம், காரிகை, பூ, வனப்பு, கந்தரம், ஏர், எழில், வாமம், யாணர், மாமை, வாகு, தகை, கவின், இராமம், அபிராமம். (கக)

### இன்பம், ஆனந்தம், நல்லொழுக்கம், பொருந்தல் இவற்றின் பெயர்கள்.

7. சுகமேமந் தோய்ப னகைமகிழ்ச்சி யின்ப
மகமலர்ச்சி யானந்த மாகுந்—தகுஞ்சரிதை
நல்லொழுக்கஞ் சாரித் திரஞ்சீல மாஞ்சிவணை
லொல்லல்கூ டல்பொருந்த லாம்.

இன்பத்தின் பெயர்:—சுகம், ஏமம், தோய்பல், நகை, மகிழ்ச்சி. (ரு)
ஆனந்தத்தின் பெயர்:—அகமலர்ச்சி. (க)
நல்லொழுக்கத்தின் பெயர்:—சரிதை, சாரித்திரம், சீலம். (ங)
பொருந்தலின் பெயர்:—சிவணல், ஒல்லல், கூடல். (ங)

### சத்திசெயல், எப்பொழுதும் என்பது, இனியென்பது, இப்பொழுது என்பது இவற்றின் பெயர்கள்.

8. அனுசிதஞ் சத்தி யவிரத மென்று
மனவரதஞ் சந்தத நித்த—மநாரத
மெப்போழ்து மாகுமினி மற்றுமே லின்றின்னே
யிப்போழ் தெனவியம்ப லாம்.

சத்திசெயலின் பெயர்:—அனுசிதம். (க)
எப்பொழுதும் என்பது:—அவிரதம், என்றும், அனவரதம், சந்ததம், நித்தம், அனாரதம். (சு)
இனியென்பது:—மற்று, மேல். (உ)
இப்பொழுது என்பது:—இன்று, இன்னே. (உ)

### துன்பத்தின் பெயர்.

9. கேத நடுக்கங் கிலேசந்தா பங்கவலை
வாதை பாதை வியாமமமர்—வேதனை

வன்படர் பீழை யிடுக்க ணிடரிடும்பை
துன்பமஞர் துக்கந் துயர்.

கேதம், சடுக்கம், கிலேசம், தாபம், கவலை, வாதை, அரந்தை, வயா, மம்மர், வேதனை, படர், பீழை, இடுக்கண், இடர், இடும்பை, அஞர், துக்கம், துயர். (௧௮)

அகலம், உயர்வு, நீளம், பாரம் இவற்றின் பெயர்கள்.

10. மேய விசாலம் விரிவு வியல்விபுல
மாய்வு நியக்குரோத மாமகல—மீயுயர்த
னேர்மை யொழுக னெடுமை நெடினீளஞ்
சீர்மைகனம் பாரமெனச் செப்பு.

அகலத்தின் பெயர்:—விசாலம், விரிவு, வியல், விபுலம், ஆய்வு, நியக்குரோதம். (௬)
உயர்வின் பெயர்:—மீ. (௧)
நீளத்தின் பெயர்:—நேர்மை, ஒழுகல், நெடுமை, நெடில். (௪)
பாரத்தின் பெயர்:—சீர்மை, கனம். (௨)

களிப்பு, சுகம், துக்கம், எல்லாம் என்பது
இவற்றின் பெயர்கள்.

11. மதமபிமா னங்களிப்பு மத்தஞ் செருக்கா
மிதஞ்சுக மாமகிதந் துக்கஞ்—சிதைவில்
சகல நிகில முழுது மகண்டம்
அகிலமெல் லாமுற்று மாம்.

களிப்பின் பெயர்:—மதம், அபிமானம், மத்தம், செருக்கு. (௪)
சுகத்தின் பெயர்:—இதம். (௧)
துக்கத்தின் பெயர்:—அகிதம். (௧)
எல்லாம் என்பதின் பெயர்:—சகலம், நிகிலம், முழுதும், அகண்டம், அகிலம், முற்றும். (௬)

நடுக்கம், சஞ்சலம் இவற்றின் பெயர்கள்.

12. அதிர்ப்பு நடுக்கங் குலைதல் பனிப்பு
விதிர்ப்புத் தளம்ப லழுங்கல்—பொதிர்ப்புக்
கலக்கல்கம் பித்தல் கசடு தாளஞ்
சலங்கம் பிதஞ்சஞ் சலம்.

நடுக்கத்தின் பெயர்:—அதிர்ப்பு, குலைதல், பனிப்பு, விதிர்ப்பு, தளம்பல், அழுங்கல், பொதிர்ப்பு, கலங்கல், கம்பித்தல். (௬)

சஞ்சலத்தின் பெயர்:—கசடு, தானம், சலம், கம்பிதம். (௭)

## உவமையின் பெயர்.

13. இணைதல் பொருவல் கடுத்த னிகர்த்தல்
துணைகேழ் சமமொத்த தூக்கோ—டணையனிபம்
மான னுறழ்தலை யன்ன படியுவமைக்
கான பெயரென்ன லாம்.

இணைதல், பொருவல், கடுத்தல், நிகர்த்தல், துணை, கேழ், சமம், ஒத்தல், தூக்கு, அணையல், நிபம், மானல், உறழ்தல், அன்ன, படி. (௧௩)

## கூட்டத்தின் பெயர்.

14. சவை தொகுதி சங்கங் கணஞ்சமவாய
மவைசமு தாயங் கதம்ப—நிவகமே
கோட்டிநிகா யப்பூகம் புஞ்சஞ் சயஞ்சமூகங்
கூட்டந் திரள்குழு வாம்.

சவை, தொகுதி, சங்கம், கணம், சமவாயம், அவை, சமுதாயம், கதம்பம், நிவகம், கோட்டி, நிகாயம், பூகம், புஞ்சம், சயம், சமூகம், திரள், குழு. (௧௪)

## வலி, வளைவு, நினைத்தல், இகழ்ச்சி இவற்றின் பெயர்கள்.

15. உரந் துப் பெறும்மிடன் மைந்துவலி யாம்வக்
கிரங்குடிலம் வாங்கல்கூன் கோடல்—குரங்குத
லுள்ளுதல் சிந்தித்த லுன்ன னினைத்தலா
மெள்ள னகையிகழ்ச்சி யாம்.

வலியின் பெயர்:—உரம், துப்பு, எறும், மிடல், மைந்து. (௫)

வளைவின் பெயர்:—வக்கிரம், குடிலம், வாங்கல், கூன், கோடல், குரங்குதல். (௬)

நினைத்தலின் பெயர்:—உள்ளுதல், சிந்தித்தல், உன்னல். (௭)

இகழ்ச்சியின் பெயர்:—எள்ளல், நகை. (௨)

## தனி, மறைவு, ஆசை இவற்றின் பெயர்கள்.

16. நிசனந் தனியே நிர்ச்சனமே காந்த
நிசனகம் வெற்றிட நீங்கல்—வசனமிது

*மாசின் மறைவாகுங் காம நசைவாஞ்சை*
*பாசைநச் சிச்சை யவா.*

*தனியின் பெயர்:—விசனம், நிர்ச்சனம், ஏகாந்தம், விரளகம், ஒத்திடம்.* (௫)
*மறைவின் பெயர்:—நீங்கல்.* (௧)
*ஆசையின் பெயர்:—காமம், நசை, வாஞ்சை, நச்சு, இச்சை, அவா.* (௬)

விகற்பம், சந்தேகம், புதுமை இவற்றின் பெயர்கள்.

**17.** *ஊகம் விகற்பம் விகடம் பிராந்திசந்*
*தேகமை யஞ்சங்கை விப்பிரம—மாகு*
*நவமு நவீனமு நூதனமும் வம்பு*
*மபிநவ மும்புதுமை யாம்.*

*விகற்பத்தின் பெயர்:—ஊகம், விகடம், பிராந்தி.* (௩)
*சந்தேகத்தின் பெயர்:—ஐயம், சங்கை, விப்பிரமம்.* (௩)
*புதுமையின் பெயர்:—நவம், நவீனம், நூதனம், வம்பு, அபிநவம்.* (௫)

முதல், முடிவு, அன்பு, அச்சம் இவற்றின் பெயர்கள்.

**18.** *முன்பூர்வ மாதி முதலக் கிரந்தலையாம்*
*பின்பபர மந்தங் கடைமுடிவா—மன்பு*
*தயவா மருள்கருணை யீர மிரக்கம்*
*பயானக மச்சம் பயம்.*

*முதலின் பெயர்:—முன், பூர்வம், ஆதி, அக்கிரம், தலை.* (௫)
*முடிவின் பெயர்:—பின்பு, அபரம், அந்தம், கடை* (௪)
*அன்பின் பெயர்:—தயவு, அருள், கருணை, ஈரம், இரக்கம்.* (௫)
*அச்சத்தின் பெயர்:—பயானகம், பயம்.* (௨)

நிறைதல், குறைதல், புளகம், கூம்புதல், நாண்
இவற்றின் பெயர்கள்.

**19.** *நிறைதல் கமம்பூ ரணமலித லெஞ்சல்*
*குறைதலீ னஞ்சிங்கல் குன்றல்—குறையாங்*
*குமிழ்ப்புப் புளகமாங் கூம்புதல் சாம்பல்*
*சமழ்ப்புநாண் மானமிலச் சை.*

*நிறைதலின் பெயர்:—கமம், பூரணம், மலிதல்.* (௩)
*குறைதலின் பெயர்:—எஞ்சல், ஈனம், சிங்கல், குன்றல், குறை.* (௫)
*புளகத்தின் பெயர்:—குமிழ்ப்பு.* (௧)

கடம்புதலின் பெயர்:—சாம்பல். (௪)
நாணின் பெயர்:—சமழ்ப்பு, மானம், இலச்சை. (௫)

பெருமை, பொலிவு, சிறுமை இவற்றின் பெயர்கள்.

20. பெருமை தடமாஞ் சயநளி பீடு
குருமலிவு மல்லல் பொலிவு—மருவுரு
வாகுஞ் சிறுமை யிலேசந் தனுவிலகு
தோகமணு வற்பந் துடி.

பெருமையின் பெயர்:—தடம், மால், சயம், நளி, பீடு, குரு. (௬)
பொலிவின் பெயர்:—மலிவு, மல்லல். (௨)
சிறுமையின் பெயர்:—இலேசம், தனு, இலகு, தோகம், அணு, அற்பம், துடி. (௭)

பழுதின் பெயர்.

21. மாசு தவறு வடுக்களங்கந் தீங்குமறு
காசுநவை கோது கசடுபழி—யாசுதோஞ்
செயில்செயிர் போக்குக் குற்ற மரிலழுக்குத்
தேரிற் புகர்பழுதாச் செப்பு.

மாசு, தவறு, வடு, களங்கம், தீங்கு, மறு, காசு, நவை, கோது, கசடு, பழி, ஆசு, தோஷம், செயிர், போக்கு, குற்றம், அரில், அழுக்கு, புகர். (௧௧)

வஞ்சகம், பழமை இவற்றின் பெயர்கள்.

22. வஞ்சகங் கைதவங் கூடங்குப் பங்கபடம்
வஞ்சனை சாட்டியம் மாயையே—எஞ்சாத
தொன்மை புராணம் புராதனந் தொன்றுபுதி
தன்மைபூரு வம்பழமை யாம்.

வஞ்சகத்தின் பெயர்:—கைதவம், கூடம், குப்பம், கபடம், வஞ்சனை, சாட்டியம், மாயை. (௭)
பழமையின் பெயர்:—தொன்மை, புராணம், புராதனம், தொன்று, புதிதன்மை, பூருவம். (௬)

வெற்றி, தோற்றல், வதை, கோபம் இவற்றின் பெயர்கள்.

23. போற்றுஞ் சயம்விசயம் வென்றியடல் வெற்றி
யாற்றல் கெடறேலித லஞ்சுதலாந்—தோற்றலடல்

* பழுது - குற்றம்.

*கோறல் வதைசெகுத்தல் கோபங் கதங்கடுத்தல்
சிறலே சீற்றஞ் சினம்.*

*வெற்றியின் பெயர்:—சயம், விசயம், வென்றி, அடல்.* (௪)
* *தோற்றலின் பெயர்:—ஆற்றல், கெடல், தொலைதல், அஞ்சுதல்.* (௪)
† *வதையின் பெயர்:—அடல், கோறல், செகுத்தல்.* (௩)
*கோபத்தின் பெயர்:—கதம், கடுத்தல், சிறல், சீற்றம், சினம்.* (௫)

ஆகச் செய்யுள்-கஎ௪.

பண்புப்பெயர்த்தொகுதி முற்றுப்பெற்றது.

---

ஒன்பதாவது

## செயல்பற்றியபெயர்த்தொகுதி.

செய்தொழில், செய்தல், படைத்தல் இவற்றின் பெயர்கள்.

1. *செயல்விதிகன் மங்கரு மஞ்செய் தொழிலே
அயர்தல் வினைதலே யாற்றல்—குயிறலும்
சிட்டித்தன் மற்றுஞ் சிருட்டித்த லுண்டாக்க
லொட்டல் படைத்தலாகும்.*

*செய்தொழிலின் பெயர்:—விதி, கன்மம், கருமம்.* (௩)
*செய்தலின் பெயர்:—அயர்தல், வினைதல், ஆற்றல், குயிறல்.* (௪)
*படைத்தலின் பெயர்:—சிட்டித்தல், சிருட்டித்தல், உண்டாக்கல், ஒட்டல்.* (௪)

வணங்கல், தழுவல் இவற்றின் பெயர்கள்.

2. *வந்தனை காணல் வணங்கல் பணிதலே
தந்தலை தாழ்தல் சலாஞ்செய்தன்—முந்தித்
தொழுதலே தண்டன் றொடர்ந்து முயங்கல்
தழுவலே விள்ளலெனச் சாற்று.*

*வணங்கலின் பெயர்:—வந்தனை, காணல், பணிதல், தாழ்தல், சலாஞ் செய்தல், தொழுதல், தண்டன்.* (எ)
*தழுவலின் பெயர்:—முயங்கல், விள்ளல்.* (௨)

---

* தோற்றல் - தோல்வி. † வதை - கொலை.

கலியாணம், கிரீடை இவற்றின் பெயர்கள்.

3. வதுவை மன்றல்கைப் பற்றன்மா மணங்க லியாணம்
விதியுளி வேட்டல் விவாகம்—புதிய
தொடலை விலாசனை வண்டல் கிரீடை
கெடவரல் கேளிக்கை யாம்.

கலியாணத்தின் பெயர்:—வதுவை, மன்றல், கைப்பற்றல், மணம், விதியுளி, வேட்டல், விவாகம். (௭)
* கிரீடையின் பெயர்:—தொடலை, விலாசனை, வண்டல், கெடவரல், கேளிக்கை. (௫)

புசித்தல், மிக்கபொருள், எச்சில் இவற்றின் பெயர்கள்.

4. அசன நுகர்த லயிற லருந்தல்
புசித்த லுணறுய்த்தன் மாந்தன்—மிசைதலா
மிச்சின் மிசைசேட மிக்கபொரு ளாகுமென்ப
ரெச்சிலுச் சிட்டமென லாம்.

புசித்தலின் பெயர்:—அசனம், நுகர்தல், அயிறல், அருந்தல், உணல், துய்த்தல், மாந்தல், மிசைதல். (௮)
‡ மிக்க பொருளின் பெயர்:—மிச்சில், மிசை, சேடம். (௩)
எச்சிலின் பெயர்:—உச்சிட்டம். (௧)

நடத்தல், பள்ளி, நித்திரை இவற்றின் பெயர்கள்.

5. திரித லியங்கல் செலலேகல் போதல்
வருதல் சரித்த னடக்கற்—குரியபெயர்
பஞ்சியணை பாய்பள்ளி கண்படை நித்திரை
துஞ்ச லுறக்கந் துயில்.

நடத்தலின் பெயர்:—திரிதல், இயங்கல், செலல், ஏகல், போதல், வருதல், சரித்தல். (௭)
பள்ளியின் பெயர்:—அணை, பாய். (௨)
நித்திரையின் பெயர்:—கண்படை, துஞ்சல், உறக்கம், துயில். (௪)

உடைதல், தேடல், சுமத்தல் இவற்றின் பெயர்கள்.

6. ஓட லிரிதல் கெடுத லுடைதலா
நாடலு கேடலுந் தேர்தலுந்—தேடல்
பரித்தல் பொறுத்தல் சுமத்த லெடுத்த
றரித்த லிவைதாங் குதல்.

* கிரீடை - விளையாட்டு. ‡ மிக்க - மிஞ்சிய.

உடைதலின் பெயர்:—தடல், இரிதல், கெடுதல். (௩)
தேடலின் பெயர்:—நாடல், கேடல், தேர்தல். (௩)
சுமத்தலின் பெயர்:—பரித்தல், பொறுத்தல், எடுத்தல், தரித்தல், தாங்குதல். (௫)

## ஒடித்தல், படித்தல், பக்கபாதம், மதர்த்தல், குரூரம் இவற்றின் பெயர்கள்.

7. ஒடித்த லிறுத்த லொசித்தன் முறித்தல்
படித்தலோ தல்கற்ற லாகும்—பிடித்தோர்
வாரமோ ரம்பக்க பாத மதமதர்த்தல்
கோரஞ்சண் டங்குரூ ரம்.

ஒடித்தலின் பெயர்:—இறுத்தல், ஒசித்தல், முறித்தல். (௩)
படித்தலின் பெயர்:—ஓதல், கற்றல். (௨)
பக்கபாதத்தின் பெயர்:—வாரம், ஓரம். (௨)
மதர்த்தலின் பெயர்:—மதம். (௧)
குரூரத்தின் பெயர்:—கோரம், சண்டம். (௨)

## தவிர்தல், கட்டுதல், அழுங்குதல், உராய்ப்போதல் இவற்றின் பெயர்கள்.

8. தணத்தலாந் தீர்த றவிர்தல்பந் தித்தல்
பிணித்தலாங் கட்டுத லார்த்தல்—பிணைத்த
லரங்க லழுங்க லழுங்குத லாகும்
உரிஞ்ச லுராய்ப்போத லாம்.

தவிர்தலின் பெயர்:—தணத்தல், தீர்தல். (௨)
கட்டுதலின் பெயர்:—பந்தித்தல், பிணித்தல், ஆர்த்தல், பிணைத்தல். (௪)
அழுங்குதலின் பெயர்:—அரங்கல், அழுங்கல். (௨)
உராய்ப்போதலின் பெயர்:—உரிஞ்சல். (௧)

## வெட்டல், அரிதல், சுடல் இவற்றின் பெயர்கள்.

9. காதுதல்கண் டித்த லெறித றுணித்தல்
பேதித்த றுண்டித் திடல்காய்தல்—சேதித்தல்
வெட்ட றுமித்த லரித லறுத்திடல்
சுட்ட லெரித்தல் சுடல்.

வெட்டலின் பெயர்:—சாதுதல், கண்டித்தல், எறிதல், துணித்தல், பேதித்தல், துண்டித்திடல், காய்தல், சேதித்தல், தமித்தல். (௯)

அரிதலின் பெயர்:—அறுத்திடல். (௧)

சுடலின் பெயர்:—சுட்டல், எரித்தல். (௨)

## வறுமை, கொடுத்தல், முயற்சி இவற்றின் பெயர்கள்.

10. இன்மைமிடி யல்க லிலம்பா டுவைவறுமை
புன்மையிலா வண்மை புரவுகொடை—நன்கவிகை
வேளாண்மை யீதல் வழங்கல் கொடுத்தலே
தாளாண்மை யாமுயற்சி தாள்.

வறுமையின் பெயர்:—இன்மை, மிடி, அல்கல், இலம்பாடு. (௪)

கொடுத்தலின் பெயர்:—வண்மை, புரவு, கொடை, கவிகை, வேளாண்மை, ஈதல், வழங்கல். (௭)

முயற்சியின் பெயர்:—தாளாண்மை, தாள். (௨)

## கிட்டுதல், தன்மை இவற்றின் பெயர்கள்.

11. கிட்டுதல் சேர்தல் பொருந்துதல் கூடுத
லொட்டுத லொன்ற லணைதலாங்—கட்டு
மாபு முறையுழுவல் மாலைபெற்றி தன்மை
பரிசு கிழமைவிதி பால்.

கிட்டுதலின் பெயர்:—சேர்தல், பொருந்துதல், கூடுதல், ஒட்டுதல், ஒன்றல், அணைதல். (௬)

தன்மையின் பெயர்:—மாபு, முறை, உழுவல், மாலை, பெற்றி, பரிசு, கிழமை, விதி, பால். (௯)

## நெருங்கலின் பெயர்.

12. துதைத லிபிட நிரந்தரந் துன்றல்
பொதுளல் விரளமே துன்ன—லதிக
மிடைதல் செறிதலே மிண்டுதல் பம்ப
லடர்த னெருங்குத லாம்.

துதைதல், இபிடம், நிரந்தரம், துன்றல், பொதுளல், விரளம், துன்னல், மிடைதல், செறிதல், மிண்டுதல், பம்பல், அடர்தல். (௧௨)

விழா, வேண்டல், உரிமை, நிழல், பெண்கள் விளையாட்டு இவற்றின் பெயர்கள்.

13. விழவாஞ் சாறஞ் சேறும் வேண்டல் விருப்பாங்
கிழமை யுரிமை தலைமை—நிழல்சாயை
பண்ணை கெடவர லோரைபொய் தல்லிவை
பெண்ணனையார்விளையாட் டாம்.

விழாவின் பெயர்:—விழவு, சாறு, சேறு. (௩)
வேண்டலின் பெயர்:—விருப்பு. (௧)
உரிமையின் பெயர்:—கிழமை, தலைமை. (௨)
நிழலின் பெயர்:—சாயை. (௧)
பெண்கள் விளையாட்டின் பெயர்:—பண்ணை, கெடவரல், ஓரை, பொய்தல். (௪)

போரின் பெயர்.

14. அமர்ஞாட்பு நேர்மலைத லாகவம் பூசல்
சமர மெதிர்தல் சமீகஞ்—சமரே
செருவெஞ் சமஞ்சங் கிராமஞ் சினப்போ
ரிரணங் கலக மிகல்.

அமர், ஞாட்பு, மலைதல், ஆகவம், பூசல், சமரம், எதிர்தல், சமீகம், சமர், செரு, வெஞ்சமம், சங்கிராமம், இரணம், கலகம், இகல். (௧௫)

சீக்கிரம், பிரிவு இவற்றின் பெயர்கள்.

15. கடுகல் விரைவு கதழ்வு துனைவு
சடிதி துரிதங் கவனம்—முடுகலே
சீக்கிர மாசு கடுப்புத் தணப்புவிட
னீக்கம் பிரிவகற னீப்பு.

சீக்கிரத்தின் பெயர்:—கடுகல், விரைவு, கதழ்வு, துனைவு, சடிதி, துரிதம், கவனம், முடுகல், ஆசு, கடுப்பு. (௧௦)
பிரிவின் பெயர்:—தணப்பு, விடல், நீக்கம், அகறல், நீப்பு. (௫)

ஆகச் செய்யுள்-௧௮௧.

செயல்பற்றிய பெயர்த்தொகுதி முற்றுப்பெற்றது.

பத்தாவது

## ஒலிபற்றியபெயர்த்தொகுதி.



### சொல், சொல்லுதல் இவற்றின் பெயர்கள்.

1. கிளவி மொழிபேச்சு வாசகஞ்சொன் மாற்ற
மளவி னுரைவாணி வார்த்தை—விளம்பல்
புகற னுவல லறைத லிசைத்தல்
பகர்தலிவை பன்னுதலே யாம்.

*சொல்லின் பெயர்:—கிளவி, மொழி, பேச்சு, வாசகம், மாற்றம், உரை, வாணி, வார்த்தை.* (௧)

*சொல்லுதலின் பெயர்:—விளம்பல், புகறல், நுவலல், அறைதல், இசைத்தல், பகர்தல்.* (௨)

### தொழுதல், கூத்து, இசைப்பாடல் இவற்றின் பெயர்கள்.

2. வழுத்தல் புகழ்ச்சிதுதி வாழ்த்தேத்தல் போற்றல்
பழிச்சல் பாசல் பாவல்—தொழற்பெயரா
மாட னிருத்த நடநட்டங் கூத்திசைப்
பாடல்கீ தங்கானம் பண்.

** தொழுதலின் பெயர்:—வழுத்தல், புகழ்ச்சி, துதி, வாழ்த்து, ஏத்தல், போற்றல், பழிச்சல், பாசல், பாவல்.* (௩)

*கூத்தின் பெயர்:—ஆடல் நிருத்தம், நடம், நட்டம்.* (௪)

*இசைப்பாடலின் பெயர்:—கீதம், கானம், பண்.* (௫)

### மெய், பொய், தருமம், பாவம் இவற்றின் பெயர்கள்.

3. மெய்யுண்மை சத்தியம் வாய்மை திடஞ்சாதம்
பொய்சடங் கூடமிச்சை பொக்கமாஞ்—செய்தரும
மேவறம் புண்ணிய நல்வினை தீவினை
பாவ மறம்பாத கம்.

*மெய்யின் பெயர்:—உண்மை, சத்தியம், வாய்மை, திடம், சாதம்.* (௬)

*பொய்யின் பெயர்:—சடம், கூடம், மிச்சை, பொக்கம்.* (௭)

*தருமத்தின் பெயர்:— அறம், புண்ணியம், நல்வினை.* (௮)

*பாவத்தின் பெயர்:—தீவினை, மறம், பாதகம்.* (௯)

---

* தொழுதல் - துதித்தல்.

நிரம்பாத மென்சொல், பழிச்சொல் இவற்றின் பெயர்கள்.

4. மழலை மிழற்றல் வருங்குதலை கொஞ்சல்
மிழலை நிரம்பாத மென்சொல்—பழிமொழியே
அம்ப லபவாத மக்கதச்சொ லாகுமே
வெம்புசிறு சொற்றீச்சொற் றூறு.

நிரம்பாத மென்சொல்லின் பெயர்:—மழலை, மிழற்றல், குதலை, கொஞ்சல், மிழலை. (௫)

பழிச்சொல்லின் பெயர்:—அம்பல், அபவாதம், அக்கதம், சிறுசொல், தீச்சொல், தூறு. (௬)

குறளை, மறைத்து மொழியுஞ்சொல் இவற்றின் பெயர்கள்.

5. குஞ்சங் குறளை கோடிவாயே குண்டியம்
விஞ்சு பிசுநம் விரிதொடுப்புத்—துஞ்சுபெயர்
ஆசி லிடக்க ரடக்கலுடன் கூகனம்
பேசின் மறைசொற் பெயர்.

குறளையின் பெயர்:—குஞ்சம், கோடிவாய், குண்டியம், பிசுநம், தொடுப்பு. (௫)

மறைத்து மொழியுஞ் சொல்லின் பெயர்:—இடக்கரடக்கல், கூகனம். (௨)

கொண்டாடல், பெருஞ்சொல், நயச்சொல், பயனில்சொல் இவற்றின் பெயர்கள்.

6. கொண்டாடன் மெச்சல் குலாவலே பாராட்டுப்
பண்பார் பெருஞ்சொற் பலாதிசொல்—தண்டா
நயச்சொ னனினச்சொ ளூடு மனர்த்தம்
பயனின் மொழியாப் பகர்.

கொண்டாடலின் பெயர்:—மெச்சல், குலாவல், பாராட்டு. (௩)

பெருஞ்சொல்லின் பெயர்:—பலாதிசொல். (௧)

நயச்சொல்லின் பெயர்:—கனிவம். (௧)

பயனில்சொல்லின் பெயர்:—அனர்த்தம். (௧)

கூறியதுகூறல், நகைச்சொல், விடாதுபேசல் இவற்றின் பெயர்கள்.

7. கூறியது கூறல் குறிக்கிற் புனருத்தி
பேறு நகைச்சொ லியலசதி—சுதில்லா

மிக்குச் சிரித்து விளம்பல் விடாதுரைத்தல்
கத்தல் பிதற்றலாக் காண்.

கூறியதுகூறலின் பெயர்:—புனருத்தி. (க)
நகைச்சொல்லின் பெயர்:—அசதி, மிக்குச் சிரித்துவிளம்பல். (உ)
விடாதுபேசலின் பெயர்:—கத்தல், பிதற்றல். (௩)

தேவர்மொழி, இழிசனர்மொழி, உயர்ந்தோர்மொழி, ஆரியத்தினின்றுந் திரிந்துவந்தசொல், பொதுவெழுத்தாலாயசொல், திசைச்சொல் இவற்றின் பெயர்கள்.

8. சங்கதந் தேவர்சொல் சாலார்க் கவப்பிரஞ்சந்
துங்கர் பிராகிருதஞ் சூழுவர்—இங்கிதிற்சேர்
தற்பவ மாரியந் தற்சமந் தான்பொது
விற்றே சிகந்திசைச்சொல் வேண்டு.

தேவர்மொழியின் பெயர்:—சங்கதம். (க)
இழிசனர்மொழியின் பெயர்:—அவப்பிரஞ்சம். (க)
உயர்ந்தோர்மொழியின் பெயர்:—பிராகிருதம். (க)
ஆரியத்தினின்றுந்திரிந்துவந்தசொல்லின் பெயர்:—தற்பவம். (க)
பொதுவெழுத்தாலாயசொல்லின் பெயர்:—தற்சமம். (க)
திசைச்சொல்லின் பெயர்:—தேசிகம். (க)

வினாவல், விடை, வினாவும் விடையுங் கூடியசொல், உபசாரச்சொல் இவற்றின் பெயர்கள்.

9. வினாவல் கடாவல் விடையுத் தரமே
வினாவிடை கூட்டி விளம்ப—றனையுரைப்பிற்
சல்லாபஞ் சொன்முகமன் சம்மான மின்னய
மெல்லா முபசார மேல்.

வினாவலின் பெயர்:—கடாவல். (க)
விடையின் பெயர்:—உத்தரம். (க)
வினாவும்விடையுங்கூடியசொல்லின் பெயர்:—சல்லாபம். (க)
உபசாரச்சொல்லின் பெயர்:—முகமன், சம்மானம், இன்னயம். (௩)

நூல், மயக்கம், தூயதன்மை, அலரி, பழி இவற்றின் பெயர்கள்.

10. நூலாக மங்கலை தந்திர நுண்பனுவல்
மாலாகு மையன் மருண்மயக்கம்—வாலாமை

சூதகந் தூபதன்மை சொல்லுமலர் கவ்
பாதகம் பாவம் பழி.

நூலின் பெயர்:—ஆகமம், கலை, தந்திரம், பனுவல் (௪)
மயக்கத்தின் பெயர்:—மால், மையல், மருள். (௩)
தூபதன்மையின் பெயர்:—வாளாமை, சூதகம். (௨)
அலரின் பெயர்:—கவ்வை, அம்பல். (௨)
பழியின் பெயர்:—பாதகம், பாவம். (௨)

## ஓசையின் பெயர்.

11. சிலம்பலிசை நாதங் கம்பலை சம்மை
யலம்பலர வந்துழனி யார்ப்புப்—புலம்பல்
கலித்த லிரங்கல் கறங்கு துவைத்த
லொலித்த லிரட்டோசை யாம்.

சிலம்பல், இசை, நாதம், கம்பலை, சம்மை, அலம்பல், அரவம், துழனி, ஆர்ப்பு, புலம்பல், கலித்தல், இரங்கல், கறங்கல், துவைத்தல், ஒலித்தல், இரட்டு. (௧௭)

## பேரொலியின் பெயர்.

12. திமிலந் துவைத்த றெழித்த லதிர்ச்சி
குமுற முரற்றல் குமுற—றமரங்
கலகங் குமிலம் கனகளம் பூசல்
வலிபே ரொலிக்காம் வழக்கு.

திமிலம், துவைத்தல், தெழித்தல், அதிர்ச்சி, குமுறம், உரற்றல், குமுறல், தமரம், கலகம், குமிலம், கனகளம், பூசல். (௧௨)

## அநுகரண வோசையின் பெயர்.

13. அம்மென வொல்லென லார்த்திட் டிழுமெனல்
கொம்மெனல் கல்லெனல் கோவென—விம்மெனல்
வல்லெனல் பொள்ளெனல் வாய்ந்தவிவை யாயுங்காற்
சொல்லி லநுகரணஞ் சூழ்.

அம்மெனல், ஒல்லெனல், இழுமெனல், கொம்மெனல், கல்லெனல், கோவெனல், இம்மெனல், வல்லெனல், பொள்ளெனல். (௯)

## உபயவோசையின் பெயர்.

14. கடகடென வோடு கலகலெனல் சலப்
படபடென வின்னும் பகரிற்—றிடுதிடெனல்

இட்ட செறுசெறென வீறுபயச் சத்தமெனத்
திட்டமுடன் சொன்னார் தெளிந்து.

கடகடெனல், கலகலெனல், படபடெனல், திடுதிடெனல், செறுசெறெனல். (ரு)

பறவைச்சத்தம, விலங்கொலி, இலை முதலியவற்றானெழுமொலி, பூணினொலி இவற்றின் பெயர்கள்.

15. தழனி கலகலஞ் சொல்பறவைச் சத்தம்
கழிபெறுங் கோலா கலமே—குழுவிலங்கி
னஞ்சத்தஞ் சோலையிலை யாலன் மருமாரஞ்சம்
சிஞ்சிதம் பூணின் சிலை.

பறவைச்சத்தத்தின் பெயர்:—தழனி, கலகலம். (உ)
விலங்கொலியின் பெயர்:—கோலாகலம். (க)
இலைமுதலியவற்றான் எழுமொலியின் பெயர்:—மருமாரஞ்சம். (க)
பூணினொலியின் பெயர்:—சிஞ்சிதம். (க)

மந்தவிசை, சமனோசை, வல்லிசை இவற்றின் பெயர்கள்.

16. மந்தரங் காகுளி மந்தவிசைப்பெயர்
சந்தமுறு மத்திமஞ் சான்மதாரம்—முந்துசம
னோசையாந் தாரமுட னுச்சமது வல்லிசையாம்
பேசி னொலிப்பேதம் பேண்.

மந்தவிசையின் பெயர்:—மந்தரம், காகுளி. (உ)
சமனோசையின் பெயர்:—மத்திமம், மதாரம். (உ)
வல்லிசையின் பெயர்:—தாரம், உச்சம். (உ)

படலம், இயல் இவற்றின் பெயர்கள்.

17. படலஞ் சருக்கம் பரிச்சேதங் காண்ட
மிடரி லிலம்பக மெல்லாந்—தொடர்பிறுறப்
பல்பொருள்கள் வைப்பாம் பகரி லினப்பொருள்கள்
சொல்லிய லோத்தென்றே ரும்.

படலத்தின் பெயர்:—சருக்கம், பரிச்சேதம், காண்டம், இலம்பகம், பல்பொருள்கள்வைப்பு. (ரு)
இயலின் பெயர்:—ஓத்து. (க)

பாட்டு, வெண்பா, ஆசிரியப்பா இவற்றின் பெயர்கள்.

18. கவிகவிதை செய்யுள் கவின்றொடர்பு தூக்கு
நவில்யாப்புப் பாபாட்டி னும—மிவையாகும்
வெண்பாவின் பேர்முதற்பா வெள்ளை விளக்கவல்
பண்பாரு மாசிரியப் பா.

பாட்டின் பெயர்:—கவி, கவிதை, செய்யுள், தொடர்பு, தூக்கு, யாப்பு, பா. (எ)

வெண்பாவின் பெயர்:—முதற்பா, வெள்ளை. (உ)

ஆசிரியப்பாவின் பெயர்:—அகவல். (க)

பாயிரம், உதாரணம், சபதம் இவற்றின் பெயர்கள்.

19. பதிகம் புனைந்துரை பாயிர மாகு
மிதிகாசங் காட்டென் றிசைப்பர்—உதாரணப்பேர்
வஞ்சினஞ் சத்தியம் வட்டித்த லாணையெலா
மெஞ்சில் சபத மிசை.

பாயிரத்தின் பெயர்:—பதிகம், புனைந்துரை. (உ)

உதாரணத்தின் பெயர்:—இதிகாசம், காட்டு. (உ)

சபதத்தின் பெயர்:—வஞ்சினம், சத்தியம், வட்டித்தல், ஆணை. (ச)

வாசகம், பதம், உறுதிச்சொல் இவற்றின் பெயர்கள்.

20. பாசுரம் வார்த்தை பகர்வசனம் வாசகம்
தேசாரும் பாழி திகழ்பதமாங்—கூசாக்
கழற லிடித்தல் சுதித்துறுதிச் சொல்லென்
றிழிபின் றுரைத்தா ரியைந்து.

வாசகத்தின் பெயர்:—பாசுரம், வார்த்தை, வசனம். (ங)

பதத்தின் பெயர்:—பாழி. (க)

உறுதிச்சொல்லின் பெயர்:—கழறல், இடித்தல். (உ)

போர்க்கழைத்தல், முதுரை, தன்மேம்பாட்டேச்சொல் இவற்றின் பெயர்கள்.

21. அறைகூவல் போர்க்கழைத்த லாகு முதுசொன்
முறைசேரு முதுரை முன்சொற்—றிறமுடனே
தன்னைமேம் பாட்டுச்சொற் றுணு நெடுமொழி
மன்னி வியப்பின் வரும்.

போர்க்கழைத்தலின் பெயர்:—அறைகூவல். (௧)
முதுரையின் பெயர்:—முதுசொல், முன்சொல். (௨)
தன்மேம்பாட்டுச்சொல்லின் பெயர்:—மெய்மொழி. (௩)

### அசைச்சொல்லின் பெயர்.

22. அந்தி லிருந்திட் டரோவிதந் தில்லிகபோ
தந்தாம் பிறபிறக்குத் தானின்று—மன்மன்னே
மாமாது மாதோவான் மற்றந்த னொருஞ்சின்
னுமமீ தெல்லா மசை.

அந்தில், இருந்து, இட்டு, அரோ, இதம், தில், இக, போ, தம், தாம், பிற, பிறக்கு, தான், நின்று, மன், மன்னே, மா, மாது, மாதோ, வான், மற்று, அந்து, அன்று, ஒரும், சின். (௨௫)

### வியங்கோளசைச்சொல், உரையசைச்சொல், முன்னிலையசைச்சொல் இவற்றின் பெயர்கள்.

23. மாவே வியங்கோள் வருமசை யம்மவுரை
மேவசை யென்றே விளம்புவர்—பாவா
யிகமியா மோமதி யத்தையித்தை மாள
பகர்முன் னிலையசையாப் பார்.

வியங்கோளசைச்சொல்லின் பெயர்:—மா. (௧)
உரையசைச்சொல்லின் பெயர்:—அம்ம. (௧)
முன்னிலையசைச்சொல்லின்பெயர்:—இக, மியா, மோ, மதி, அத்தை, இத்தை, மாள. (௭)

ஆகச் செய்யுள் - ௨௧௨.

ஒலிபற்றிய பெயர்த்தொகுதி முற்றுப்பெற்றது.

---

## பதினொராவது
## ஒருசொல் பல்பொருட்பெயர்த்தொகுதி.

---

### அரி, கோ, என்பவற்றின் பொருள்கள்.

1. அரிபன்றி தேரைகிளி பச்சையளி சிங்கம்
பரிகவிபாம் பிந்திரன்மால் கால்கூற்—றிருசுடர்தீ
கோவிறை திக்குக் கிரணஞ் சலங்குலிச
மாவலைகண் பார்வைக்க மப்பு.

*அரி என்பது:—பன்றி, தவளை, கிளி, பச்சை, வண்டு, சிங்கம், குதிரை, குரங்கு, பாம்பு, தேவேந்திரன், விஷ்ணு, காற்று, இயமன், சந்திரன், சூரியன், நெருப்பு.* (௧௬)

*கோ என்பது:—அரசன், திக்கு, கிரணம், நீர், வச்சிராயுதம், பசு, மலை, கண், பூமி, தேவலோகம், அம்பு.* (௧௧)

### கம், வசு, வித்தம், காண்டம் என்பவற்றின் பொருள்கள்.

2. *கந்தலை வாயுப் பிரமன் சலஞ்சுவர்க்கம்*
*புந்தி வசுமணி கோதனந்தீ—பந்தாத்தோர்*
*தியபதிப் புப்பொன் திரளறிவு வித்தநீ*
*ராயுதங்கா டாடைகாண் டம்.*

*கம் என்பது:—தலை, வாயு, பிரமன், நீர், தேவலோகம், புத்தி.* (௬)

*வசு என்பது:—இரத்தினம், பசு, பொன், நெருப்பு, அட்டவசுக்கள்.* (௫)

*வித்தம் என்பது:—பழிப்பு, பொன், கூட்டம், அறிவு.* (௪)

*காண்டம் என்பது:—நீர், ஆயுதம், காடு, வஸ்திரம்.* (௪)

### நாகம், துப்பு, கமலம் என்பவற்றின் பொருள்கள்.

3. *வாகுபுன்னை யாடைகா ரிய மலையானை*
*வேக விடவாவ மேலுலக—நாகமாந்*
*துப்புப் பவளம் வலியரக்குத் தாமரை*
*யப்புக் கமலமென லாம்.*

*நாகம் என்பது:—புன்னைமரம், வஸ்திரம், காரீயம், மலை, யானை, பாம்பு, தேவலோகம்.* (௭)

*துப்பு என்பது:—பவளம், வல்லமை, அரக்கு.* (௩)

*கமலம் என்பது:—தாமரை, நீர்.* (௨)

### குபேரன், வனம், கனம், அணங்கு, பொருள் என்பவற்றின் பொருள்கள்.

4. *தனபதி சோமன் குபேரனுங் கானீர்*
*வனமாங்கார் பொன்செறிவு பாரம்—கனமா*
*நலர்தெய்வ மாசை நலிமா தணங்காம்*
*பொலந்திசைசெய் புந்தி பொருள்.*

*குபேரன் என்பது:—அளகாதிபதி, சந்திரன்.* (௨)

*வனம் என்பது:—காடு, நீர்.* (௨)

கனம் என்பது:—மேகம், பொன், செறிவு, பாரம். (௪)
அணங்கு என்பது:—அழகு, தெய்வம், ஆசை, கொல்லியம் பாவை. (௪)
பொருள் என்பது:—பொன், திசை, மகன், அறிவு. (௪)

மல்லல், சிலை, தரணி, குலம் என்பவற்றின் பொருள்கள்.

5. மல்லல் வலியும் வளனு மிகுதியுமாங்
கல்லொலிவின் மூலங் கடுஞ்சிலைக்கா—நல்ல
தலமா யிரங்கதிரோன் றானுந் தரணி
குலமின மில்லம் குடி.

மல்லல் என்பது:—வல்லமை, வளம், மிகுதி. (௩)
சிலை என்பது:—கல், ஓசை, வில், மூலாள். (௪)
தரணி என்பது:—பூமி, சூரியன், மலை. (௩)
குலம் என்பது:—இனம், மனை, சாதி. (௩)

அம்பரம், கோடு, ககம், கழுது என்பவற்றின் பொருள்கள்.

6. அம்பர மாகாய மாடைகடல் வெற்புச்சி
கொம்புபணி லங்கரை கோடென்ப—ரம்பு
பறவை ககமா மிதனொடும் பேயு
மறுபத முங்கழுதுக் காம்.

அம்பரம் என்பது:—ஆகாயம், சீலை, கடல். (௩)
கோடு என்பது:—மலையினுச்சி, கொம்பு, சங்கு, நீர்க்கரை. (௪)
ககம் என்பது:—அம்பு, பறவை. (௨)
கழுது என்பது:—பரண், பேய், வண்டு. (௩)

வாமம், தாமம், நேமி, பயோதரம், அரவம் என்பவற்றின் பொருள்கள்.

7. வாம மிடப்பால் வனப்புக் குறங்குற
டாம மலங்கலொளி தாமணியா—நேமி
பரவை திகிரி பயோதரங்கார் கொங்கை
யரவ மொலிநாக மாம்.

வாமம் என்பது:—இடப்பக்கம், அழகு, தொடை, குறள். (௪)
தாமம் என்பது:—மாலை, ஒளி, தாமணி. (௩)
நேமி என்பது:—கடல், சக்கரம். (௨)
பயோதரம் என்பது:—மேகம், கொங்கை. (௨)
அரவம் என்பது:—ஓசை, பாம்பு. (௨)

### கிலாலம், உதகம், தக்கிணம், கவி, பொழில் என்பவற்றின் பொருள்கள்.

8. சலமுதிரங் காடிகி லாலம்பா னீய
நிலமுதகந் தக்கிணந் தெற்கு—வலமாங்
கவிகவிதை வானரஞ் சுக்கிரனுஞ் சோலை
புவிபெருமை காடு பொழில்.

கிலாலம் என்பது:—நீர், இரத்தம், கஞ்சி. (௩)
உதகம் என்பது:—நீர், பூமி. (௨)
தக்கிணம் என்பது:—தெற்கு, வலப்பக்கம். (௨)
கவி என்பது:—கவிதை, குரங்கு, சுக்கிரன். (௩)
பொழில் என்பது:—சோலை, பூமி, பெருமை, காடு. (௪)

### அத்தி, ஆரம், நகம், புண்டரிகம் என்பவற்றின் பொருள்கள்.

9. அத்தி யதவானை யார்கலியென் பூறுஞ்
சுத்த மணிவடம்பூண் சந்தாத்தி—முத்தாரம்
பூமரம் பொற்றை யுகிர்நகம் புண்டரிகந்
தாமரைதிக் கானைபுலி வண்டு.

அத்தி என்பது:—அத்திமரம், யானை, கடல், எலும்பு, கொலை. (௫)
ஆரம் என்பது:—மணிவடம், ஆபரணம், சந்தனம், ஆத்திமரம், முத்து. (௫)
நகம் என்பது:—பூமி, மரம், மலை, விரலின்நகம். (௪)
புண்டரிகம் என்பது:—தாமரை, திக்கானையிலொன்று, புலி, வண்டு. (௪)

### வச்சிரம், வம்பு, காந்தாரம், வாரணம் என்பவற்றின் பொருள்கள்.

10. வச்சிரமோர் கள்ளி வயிர மணிகுலிசங்
கச்சுநவம் வம்புகாந் தாரம்பண்—ணச்சமிசை
கானமாங் கோழி கவசந் தடைகடல்
யானையெய்ப்பை சங்குவார ணம்.

வச்சிரம் என்பது:—சதுரக்கள்ளி, வயிரமணி, வச்சிராயுதம். (௩)
வம்பு என்பது:—கச்சு, புதுமை. (௨)
காந்தாரம் என்பது:—ஒருபண், இசை, காடு. (௩)
வாரணம் என்பது:—கோழி, கவசம், தடை, கடல், யானை, சங்கு. (௬)

தானம், சாரங்கம், வையம், பாணி என்பவற்றின் பொருள்கள்.

11. தான மிடங்கொடை சாரும் வலிமையுடன்
யானை மதந்தேவ லோகமா—மான்வண்டு
சாரங்க மாம்வையம் பண்டி யுரோகணிதேர்
பார்கைநீர் சொல்பாணி யாம்.

தானம் என்பது:—இடம், கொடை, வலிமை, யானைமதம், தேவலோகம். (௫)

சாரங்கம் என்பது:—மான், வண்டு. (௨)

வையம் என்பது:—பண்டி, உரோகணிநாள், தேர், பூமி. (௪)

பாணி என்பது:—கை, நீர், சொல். (௩)

இரவி, அயம், மாலை, திகிரி, படி என்பவற்றின் பொருள்கள்.

12. இரவி பருக்கன் பருப்பத மென்பர்
புரவிநீர் சேறு டயமா—மிரவியல்பு
தார்மாலை சக்கர மூங்கில் மலைதிகிரி
பார்மானல் பெற்றி படி.

இரவி என்பது:—சூரியன், மலை. (௨)

அயம் என்பது:—குதிரை, நீர், சேறு, ஆடு. (௪)

மாலை என்பது:—இரா, தன்மை, பூமாலை. (௩)

திகிரி என்பது:—சக்கராயுதம், மூங்கில், மலை. (௩)

படி என்பது:—பூமி, ஒப்பு, குணம். (௩)

சக்கரம், கருமை என்பவற்றின் பொருள்கள்.

13. படைதேர்க்கால் வட்டம் பறவை பெருமை
புடவி பிறப்புப் பொருப்புக்—கடலே
கிரிமல் லிகைசக் கரமாங் களவி
கருமை பெருமை கறுப்பு.

சக்கரம் என்பது:—சக்கராயுதம், தேருருளை, வட்டம், சக்கரவாகப் பட்சி, பெருமை, பூமி, பிறப்பு, மலை, கடல், மலைமல்லிகை. (௧௦)

கருமை என்பது:—பெருமை, கறுப்பு. (௨)

கடி, மடி, இறும்பு, புரை என்பவற்றின் பொருள்கள்.

14. கடிபுதுமை கூர்மைமண நாற்றம்பேய் காவல்
முடுகலச்சங் க[illegible] மிகுதி—மடிவயிறு

சொம்புபொய் சீலைமலை துறகஞ்சப் பூவிறம்பே
யாம்புரை யொப்புயர மாக.

கடி என்பது:—புதுமை, கூர்மை, கலியாணம், வாசனை, பேய், காவல், சீக்கிரம், அச்சம், காலம், மிகுதி. (௧௦)

மடி என்பது:—வயிறு, சோம்பு, பொய், சீலை (௪)

இறம்பு என்பது:—மலை, சிறுசெடி, தாமரைப்பூ. (௩)

புரை என்பது:—ஒப்பு, உயரம், குற்றம். (௩)

புட்கரம், எஃகு, கண்டிகம் என்பவற்றின் பொருள்கள்.

15. யானைத் துதிக்கைத் தலைபருந்து தீர்த்தநீர்
பான்மை சமலம்வாள் பாண்டமுகம்—வானிறைவு
புட்கரமெஃகு காமுருக்குக் கூர்மைவேல் வான்காடு
முட்கண் டகமாய் மொழி.

புட்கரம் என்பது:—யானைத்துதிக்கைநுனி, பருந்து, தீர்த்தம், நீர், குணம், தாமரை, வாள், பாத்திரத்தின்வாய், ஆகாசம், நிறைவு. (௧௦)

எஃகு என்பது:—உருக்கு, கூர்மை, வேல். (௩)

கண்டகம் என்பது:—வாள், காடு, முள். (௩)

தலம், குயம், வில், கரி, சிலம்பு என்பவற்றின் பொருள்கள்.

16. இலையு நிலனுந் தலங்கொடு வாளு
முலையுங் குயம்வில் லொளியுஞ்—சிலையுங்
கரியானை சான்றிருக்கை யாஞ்சிலம்பு குன்ற
மரிநூ புரமொலி யாம்.

தலம் என்பது:—இலை, பூமி (௨)

குயம் என்பது:—அரிவாள், கொங்கை (௨)

வில் என்பது:—ஒளி, விற்படை. (௨)

கரி என்பது:—யானை, சாட்சி, இருக்கை. (௩)

சிலம்பு என்பது:—மலை, காற்சிலம்பு, ஓசை. (௩)

தாது, ஓதிமம், தார் என்பவற்றின் பொருள்கள்.

17. தாதுபஞ்ச லோக மிரத்தாதி யேழுந்து
பூதாற்செங் கற்றூது மாதுவாது—வோதிமம்
பூமன் சிறைபன்னம் பூதா மானமா
தாமங் கொடிப்படை தார்.

*தாது என்பது:—பஞ்சலோகம், இரத்தாதியேழு, ஐம்பூதம், காவிக் கல், தாதுமாதுளை, பூந்தாது.* (௬)

*ஓதிமம் என்பது:—அன்னப்பட்சி, மலை, கவரிமான்.* (௩)

*தார் என்பது:—புட்பமாலை, கொடிப்படை.* (௨)

## விசயம், அயில், படர், விளிவு, சடை என்பவற்றின் பொருள்கள்.

18. *சயமே சருக்கரை பூர்கோள் விசய*
*மயில்வேல் இரும்புகூர் காஞ்சில்—துயர்பகை*
*போதலுள்ளல் மார்க்கம் படராம் விளிவுகெடல்*
*சாதல்வேர் வேணி சடை.*

*விசயம் என்பது:—வெற்றி, சருக்கரை, பரிவேடம்.* (௩)
*அயில் என்பது:—வேல், இரும்பு, கூர்மை, கலப்பை.* (௪)
*படர் என்பது:—துயர், பகை, நடத்தல், நினைத்தல், வழி.* (௫)
*விளிவு என்பது:—கெடல், இறத்தல்.* (௨)
*சடை என்பது:—வேர், வேணி.* (௨)

## கவிகை, படை, ஆலம், உறழ்தல், தாலம் என்பவற்றின் பொருள்கள்.

19. *குடையுங் கொடையுங் கவிகையா மென்பர்*
*படைசேனை யாயுத மாகும்—வடம்விட*
*மாலமா மொத்தல் பகைத்த லுறழ்தலாம்*
*தாலமாம் பெண்ணை தலம்.*

*கவிகை என்பது:—குடை, கொடை.* (௨)
*படை என்பது:—சேனை, ஆயுதம்.* (௨)
*ஆலம் என்பது:—ஆலமரம், நஞ்சு.* (௨)
*உறழ்தல் என்பது:—ஒத்தல், பகைத்தல்.* (௨)
*தாலம் என்பது:—பனை, பூமி.* (௨)

## ஆழி, பாழி, தாழை, ஒலியல் என்பவற்றின் பொருள்கள்.

20. *ஆழிவே லாவலயஞ் சக்கர மோதிரமாம்*
*பாழி பெருமை யிடம்வலியாந்—தாழைதான்*
*தெங்குமடற் கைதை சிலைதெருத் தோணுதி*
*தொங்க லொலியலெனுஞ் சொல்.*

ஆழி என்பது:—சமுத்திரம், சக்கராயுதம், மோதிரம். (௩)
பாழி என்பது:—பெருமை, இடம், வல்லமை. (௩)
தாழை என்பது:—தென்னமரம், தாழைமரம். (௨)
ஒலியல் என்பது:—சீலை, தெரு, தோல், யாறு, பூமாலை. (௫)

### கந்தம், கந்தரம், கழை, கறை, நகர், சிறை என்பவற்றின் பொருள்கள்.

21. கந்த மணங்கிழங்கு கார்கழுத்து வெற்பினமை
கந்தர மாகுங் கழைகரும்பு—சந்தி
கறையாகுஞ் செம்பால் கருமைநக ரில்லூர்
சிறையாகுங் காவல் சிறகு.

கந்தம் என்பது:—வாசனை, கிழங்கு. (௨)
கந்தரம் என்பது:—மேகம், கழுத்து, மலைக்குகை. (௩)
கழை என்பது:—கரும்பு, மூங்கில். (௨)
கறை என்பது:—இரத்தம், கறுப்பு. (௨)
நகர் என்பது:—வீடு, ஊர். (௨)
சிறை என்பது:—காவல், சிறகு. (௨)

### சிகி, சிகரி, நியமம், கட்சி, குரை, வான் என்பவற்றின் பொருள்கள்.

22. சிகிமயிலுந் தீயுஞ் சிலம்பு மாவுஞ்
சிகரிவரை கோபுரமங் காடி—வழிநியமங்
காடுங் கூடாகுங் கட்சி குரையொலியா
வானுமா காய மழை.

சிகி என்பது:—மயில், நெருப்பு, சிலம்பு, கேது. (௪)
சிகரி என்பது:—மலை, கோபுரம். (௨)
நியமம் என்பது:—அங்காடி, வழி. (௨)
கட்சி என்பது:—காடு, கூடு. (௨)
குரை என்பது:—சத்தம், குதிரை. (௨)
வான் என்பது:—ஆகாயம், மழை. (௨)

### பிரமம் என்பதன் பொருள்கள்.

23. பிரமம்வே தாவேத மந்திரமால் வேள்வி
இரவிமதி தீமுனிவர் முத்தி—தருமநூல்

தன்மை யுலக வழக்கர் தவமீசன்
மென்மை யியல்பு விதி.

பிரமம் என்பது:—பிரமன், வேதம், மந்திரம், திருமால், யாகம், சூரியன், சந்திரன், நெருப்பு, முனிவர், மோட்சம், தருமநூல், குணம், உலகவழக்கம், தவம், ஈசன், மென்மை, ஒழுக்கம், நியமிப்பு. (கஅ)

அண்டசம், வல்லி, அரில் என்பவற்றின் பொருள்கள்.

24. அரவு தவளை முதலைமீ னாமை
யரணை யுடும்போந்தி யிப்பி—விரிபறவை
பல்லிநண் டண்டச மாகும் பதாகைகொடி
வல்லி யரில்பிணக்கு மாக.

அண்டசம் என்பது:—பாம்பு, தவளை, முதலை, மீன், ஆமை, அரணை, உடும்பு, ஓந்தி, இப்பி, பறவை, பல்லி, நெண்டு. (கஉ)
வல்லி என்பது:—விருதக்கொடி, படர்கொடி. (உ)
அரில் என்பது:—பிணக்கல், குற்றம். (உ)

சிந்து, மதலை, கதலி, பொறி, வெறி என்பவற்றின் பொருள்கள்.

25. உததிநதி நீர்சிந்தாந் தூண்கலஞ்சேய் கொன்றை
மதலையாந் தேறுகொடி வாழை—கதலி
பொறியா மதிதிருப் புள்ளிசெல்வந் தேமல்
வெறியாடச் சங்கள் விரை.

சிந்து என்பது:—சமுத்திரம், நதி, நீர். (ங)
மதலை என்பது:—தூண், கப்பல், பிள்ளை, கொன்றைமரம். (ச)
கதலி என்பது:—தேற்றுமரம், விருதக்கொடி, வாழை. (ங)
பொறி என்பது:—அறிவு, திருமகள், புள்ளி, செல்வம், தேமல். (ரு)
வெறி என்பது:—ஆடு, அச்சம், கள், வாசனை. (ச)

பிறங்கல், கன்னல், இருள், வீதல், தகை என்பவற்றின் பொருள்கள்.

26. பெருமை மலைபிறங்கல் கன்னல் கடிகை
கரகந் திமிர நரக—மிருளா
மொழிதல் கெடுதல் வறுமையே வீத
லழகன்பு பாடுதகை யாம்.

பிறக்கல் என்பது:—பெருமை, மலை. (உ)
கன்னல் என்பது:—நாழிகை, கரகம். (உ)
இருள் என்பது:—இருள், நரகம். (உ)
வீதல் என்பது:—இறத்தல், கெடுதல், வறுமை. (௩)
தகை என்பது:—அழகு, அன்பு, பெருமை. (௩)

தட்டை, சினை, ஓடை, வல், மை என்பவற்றின் பொருள்கள்.

27. தட்டைதினைத் தாண்மழித்தல் தத்தைகடி கோன்மூங்
முட்டை யுறுப்புக் கவடுசினை—பட்டமடு [கில்
வோடையாம் வல்விரைவு மேடுவன்மை சூதாகு
மாடுகுற்ற மால்கறுப்பு மை.

தட்டை என்பது:—தினைத்தாள், மொட்டை, கிளியோட்டுங்கோல், மூங்கில். (௪)
சினை என்பது:—முட்டை, உறுப்பு, மரக்கொம்பு. (௩)
ஓடை என்பது:—நெற்றிப்பட்டம், மடு. (உ)
வல் என்பது:—சீக்கிரம், மேடு, வலிமை, சூதாடுகருவி. (௪)
மை என்பது:—ஆடு, குற்றம், மேகம், கறுப்பு. (௪)

களங்கம், அங்கணம், குற்றம், வேலை, வள், பிண்டம் என்பவற்றின் பொருள்கள்.

28. குற்றங் கறைகளங்க மாமங்க ணஞ்சேறு
முற்றமாங் கோதுஞ் சிறுமைபுங்—குற்றமாம்
மாக்கடல்கா லங்கருமம் வேலைவள்கூர் காதுவாள்
யாக்கைதிரள் சோறுபிண்ட மாம்.

களங்கம் என்பது:—குற்றம், அழுக்கு. (உ)
அங்கணம் என்பது:—சேறு, முற்றம். (உ)
குற்றம் என்பது:—தவறு, சிறுமை. (உ)
வேலை என்பது:—கடல், காலம், தொழில். (௩)
வள் என்பது:—கூர்மை, காது, வாள். (௩)
பிண்டம் என்பது:—சரீரம், திரளைச்சோறு. (உ)

யாணர், மணம், நளி, தளிமம், சாகம், அத்தம் என்பவற்றின் பொருள்கள்.

29. வளநவம் யாணர் மணங்கூட்ட நாற்றம்
நளிபெருமை சீதஞ் செறிவு—தளிமமா

*மெத்தை பழகு தழைதேக்குச் சாகமா*
*மத்தநடை கைதான்பொன் னும்.*

*யாணர் என்பது:—வளம், புதுமை.* (௨)
*மணம் என்பது:—கூட்டம், வாசனை.* (௨)
*கனி என்பது:—பெருமை, குளிர்ச்சி, செருக்கம்.* (௩)
*தளிமம் என்பது:—மெத்தை, அழகு.* (௨)
*சாகம் என்பது:—இலை, தேக்கமரம்.* (௨)
*அத்தம் என்பது:—வழி, கைத்தலம், அத்தநாள், பொன்.* (௪)

### அருத்தம், பவித்திரம், கூடம், போதி என்பவற்றின் பொருள்கள்.

30. *அருத்தந் தனஞ்சொற் பொருள்பயன் பாதி*
*கருத்துப் பவித்திரஞ் சுத்தந்—தருப்பை*
*இரண்மயம் பொய்கூட மாம்மலைய வெற்பும்*
*அரசமிவை போதியென்ப தாம்.*

*அருத்தம் என்பது:—பொன், சொற்பொருள், பயன், பாதி, கருத்து.* (௫)
*பவித்திரம் என்பது:—பரிசுத்தம், தருப்பை.* (௨)
*கூடம் என்பது:—வஞ்சனை, பொய்.* (௨)
*போதி என்பது:—மலை, அரசமரம்.* (௨)

### திரட்சி, கரேணு, கடகம், வெளில் என்பவற்றின் பொருள்கள்.

31. *முடலை தாளந் திரட்சி கரேணு*
*பிடிகளி றென்றிவற்றின் பேராங்—கடகமதி*
*ற்சேனைதொடி வட்டந் தயிர்கடையுந் தூணணில்*
*யானைத் தறிவெளி லாம்.*

*திரட்சி என்பது:—உண்டை, முத்து.* (௨)
*கரேணு என்பது:—பெண்யானை, ஆண்யானை.* (௨)
*கடகம் என்பது:—மதில், சேனை, கங்கணம், வட்டம்.* (௪)
*வெளில் என்பது:—தயிர்கடையுந்தூண், அணில், யானைகட்டுந்தூண்.* (௩)

### அற்றம், அருப்பம், சிரகம், கலை என்பவற்றின் பொருள்கள்.

32. *அவகாச மச்ச மெளிவுசோர் வற்றங்*
*கவலைநோய் காடே ருப்பந்—திவலை*

*காக மிவைசிரக மாகுங் கனைதா*
*னரவ நிறைவுநெருக் கம்.*

*அற்றம் என்பது:—அவகாசம், அச்சம், மெலிவு, சோர்வு.* (௪)
*அருப்பம் என்பது:—துன்பம், நோய், காடு, ஊர்.* (௪)
*சிரகம் என்பது:—தலை, காகம்.* (௨)
*கனை என்பது:—ஓசை, நிறைவு, நெருக்கம்.* (௩)

வாரம், தண்ணடை, பூவை, சுசி என்பவற்றின் பொருள்கள்.

33. *வாரங் கரைபாக மன்பு மருதநிலத்*
*தூரகனுள் பச்சிலை தண்ணடையாஞ்—சாரிகை*
*காயா மடமாது பூவை சுசிவெண்மை*
*தீயாடி சுத்தங் குடை.*

*வாரம் என்பது:—நீர்க்கரை, பங்கு, அன்பு.* (௩)
*தண்ணடை என்பது:—மருதநிலத்தூர், காடு, பச்சிலை.* (௩)
*பூவை என்பது:—நாகணவாய்ப்பட்சி, காயாமரம், பெண்.* (௩)
*சுசி என்பது:—வெண்மை, நெருப்பு, ஆடிமாதம், சுத்தம், வெண் குடை.* (௫)

பலாசம், பாடலம், அருச்சனம், அருணம் என்பவற்றின் பொருள்கள்.

34. *தலம்பச்சை வண்ணம் பலாசுபலா சம்பா*
*டலஞ்சிவப்புப் பாதிரிபாய் மாவாம்—பொலமே*
*மருநெருக்கு வெண்மை யருச்சன மாகு*
*மருணமா னாடுசிவப் பாம்.*

*பலாசம் என்பது:—இலை, பச்சைநிறம், பனை.* (௩)
*பாடலம் என்பது:—சிவப்பு, பாதிரிமரம், குதிரை.* (௩)
*அருச்சனம் என்பது:— பொன், மருதமரம், எருக்கமரம், வெண்மை.* (௪)
*அருணம் என்பது:—மான், ஆடு, சிவப்பு.* (௩)

குளம், களம், கும்பம், தனம் என்பவற்றின் பொருள்கள்.

35. *குளமாகு நெற்றி சருக்கரை குட்டங்*
*களமா களபூமி கண்டங்—களரி*
*குடங்கரி மத்தகஞ் சாடிகும்ப மென்பர்*
*தடங்கொங்கை வித்தர் தனம்.*

குளம் என்பது:—நெற்றி, சருக்கரை, தடாகம். (௩)
களம் என்பது:—போர்க்களம், கழுத்து, களர். (௩)
கும்பம் என்பது:—குடம், யானைமத்தகம், கும்பராசி. (௩)
தனம் என்பது:—கொங்கை, பொன். (௨)

ஞானம், நூனம், மறை, மா என்பவற்றின் பொருள்கள்.

36. ஞான மறிவுகல்வி நல்லொழுக்க மாமென்பர்
நூனமாங் குன்றலு நிச்சயமு—மான
மறைமந் திரம்வேத மாவாம் புரவி
சிறைவண்டு சூதந் திரு.

ஞானம் என்பது:—அறிவு, கல்வி, நல்லொழுக்கம். (௩)
நூனம் என்பது:—குறைதல், நிச்சயம். (௨)
மறை என்பது:—மந்திரம், வேதம். (௨)
மா என்பது:—குதிரை, வண்டு, மாமரம், திருமகள். (௪)

ஆகச் செய்யுள்—௨௪௮.

ஒருசொற் பல்பொருட் பெயர்த்தொகுதி முற்றுப்பெற்றது.

---

பன்னிரண்டாவது

## பல்பெயர்க்கொருபெயர்த்தொகுதி.



ஏகம், இருமை.

1. கூறியதே கூறினுங் குற்றமில்லை நற்பொருள்
வேறு பெறினென்றே விதித்தலாற்—றேறுமாகோன்
ஏகமேவீடு மறுமையோ டிம்மை யென்
றாகு மிருமை யறி.

ஏகம்:—வீடு. (௧)
இருமை:—இம்மை, மறுமை. (௨)

மூவிடம், மும்மூர்த்தி, முக்காலம்.

2. முன்னிலை தன்மை படர்க்கையா மூன்றிடம்
பன்னு சிவன்மாயன் பங்கயனே—மும்மூர்த்தி
காலமொரு மூன்றுங் கருது மிறப்புடனே
சாலநிகழ் வெதிர்வுந் தான்.

மூவிடம்:—முன்னிலை, தன்மை, படர்க்கை. (௩)
மும்மூர்த்தி:—சிவன், திருமால், பிரமன். (௩)
முக்காலம்:—இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம். (௩)

### நாற்கவி, நாற்பொருள்.

3. ஆசு மதுரமே சித்திரநல் வித்தார
மேசில்கவி நான்கென் றியம்புவார்—பேசும்
அறம்பொரு ளின்பம்வீ டாங்கேள்வி நான்குந்
திறம்பாத நாற்பொருளாய்த் தேறு.

நாற்கவி:—ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி. (௪)
நாற்பொருள்:—அறம், பொருள், இன்பம், வீடு. (௪)

### ஐவகை வினாக்கள்.

4. அறியான் வினாவ லறிவொப்புக் காண்டல்
குறியிஐயந் தீர்தல் குறித்தோ—னறிவுகொள்ள்
மெய்யவற்குக் காட்டல் வினவி லரியவினா
ஐவகையா மென்றே யறி.

ஐவகை வினாக்கள்:—அறியான்வினாவல், அறிவொப்புக்காண்டல், ஐயந்தீர்தல், குறித்தோனறிவுகொளல், மெய்யவற்குக்காட்டல். (௫)

### ஐங்குரவர், ஐம்பால்.

5. அரச னுபாத்தி யாயப்பன் மூத்தோன்
குரவரோ ரைவரெனக் கூறு—மொருவன்
ஒருத்திபல ரொன்றுபல வோதுமிவை யைந்தும்
விரித்திடுமைம் பாலாக வேண்டு.

ஐங்குரவர்:—அரசன், உபாத்தியாயன், தாய், தந்தை, மூத்தோன். (௫)
ஐம்பால்:—ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல. (௫)

### ஐந்து நிலங்கள், பஞ்சாங்கம்.

6. மொய்குறிஞ்சி பாலை மருதஞ் செழுமுல்லை
நெய்தலிவை யைந்து நிலமென்பர்—மெய்சேரும்
பஞ்சாங்கந் தானே திதிவாரம் பார்த்திடோ
ளொஞ்சில்யோ கங்கரண மேல்.

ஐந்து நிலங்கள்:—குறிஞ்சி, பாலை, மருதம், முல்லை, நெய்தல். (௫)
பஞ்சாங்கம்:—திதி, வாரம், நாள், யோகம், கரணம். (௫)

### ஐம்பூதம், பஞ்சபக்ஷி.

7. பிருதிவிப் புத்தேயு பேசு மருத்து
மருவிமோ காயமைம் பூதம்—பொருவரிய
வல்லூறே யாந்தை வளர்காகங் கோழியெழில்
வெல்லுமயில் பஞ்சபட்சி மேல்.

ஐந்துபூதம்:—நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம். (௫)
பஞ்சபட்சி:—வல்லூறு, ஆந்தை, காகம், கோழி, மயில். (௫)

### திருமாலாயுதம், ஈசனைம்முகம்.

8. வரிசிலை சங்காழி வாள்கதையிவ் வைந்து
மரிதன் படைக்கலமென் றோது—மரன்முகமே
தற்புருட மீசானம் சத்யோசா தம்வாமம்
விற்சீ ரகோரம் விரி.

திருமால் ஆயுதம்:—தனு, சங்கம், சக்கரம், வாள், தண்டு. (௫)
ஈசனைம்முகம்:—தற்புருடம்; ஈசானம், சத்தியோசாதம், வாமம், அகோரம். (௫)

### நாடுபடுதிரவியம், நகர்படுதிரவியம்.

9. கன்னல் பயறு கதலியொடு செவ்விளநீர்
செந்நெலிவை நாட்டின் திரவியமா—மன்னனுடன்
கண்ணாடி பித்தன் கருங்குரங்கு தந்தியைந்தும்
இன்ன நகர்ப்பொருளாச் செப்பு.

நாடுபடுதிரவியம்:—கரும்பு, சிறுபயறு, வாழை, செவ்விளநீர், செந்நெல். (௫)
நகர்படுதிரவியம்:—அரசன், கண்ணாடி, பித்தன், கருங்குரங்கு, யானை. (௫)

### காடுபடுதிரவியம், கடல்படுதிரவியம்.

10. நாவிமயிற் பீலி நறுந்தே னரக்கிறால்
கானின் திரவியமாக் கட்டுரைப்பர்—மேவியுறும்
உப்புத் தரள முயர்சங்கோ டோர்க்கோலை
துப்புங் கடற்பொருளாச் சொல்.

காடுபடுதிரவியம்:—நாவி, மயிற்பீலி, தேன், அரக்கு, இறால். (ரு)
கடல்படுதிரவியம்:—உப்பு, முத்து, சங்கு, *ஓர்க்கோலை, பவளம்.(ரு)

## மலைபடுதிரவியம், ஐம்புலம்.

11. குங்குமந் தக்கோல மகில்கோட்ட மிளகிவைக
டங்கு மலைப்பொருளாச் சாதிப்பர்—பொங்கு
சுவையொளியூ றோசை நாற்றமிவை யைந்து
நவையில் புலனென்றே நாடு.

மலைபடுதிரவியம்:—குங்குமம், தக்கோலம், அகில், கோட்டம், மிளகு. (ரு)
ஐம்புலன்:—சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம். (ரு)

## எழுத்துத் தானப்பொருத்தம்.

12. பாலன் குமரன் பகரரசன் மூப்புடன்சாக்
காடும்பேர் முன்னெழுத்துக் கொண்டாதி—சாலிற்
கவிதனக்கு முன்மூன்று மின்பங் கடைய
நவையாகு மென்றே நவில்.

எழுத்துத் தானப்பொருத்தம்:—பாலன், குமரன், அரசன், ‡ விருத்தம், மரணம். (ரு)
இவற்றுள் முன்னையமூன்றும் நன்மை பயக்கும்; பின்னைய இரண்டும் தீமை பயக்கும்.

## உட்சமயம்.

13. உட்சமய மாறு முறைக்குங்காற் சைவமுடன்
பட்சமுறும் பாசு பதத்தோடே—நிச்சயஞ்சேர்
வாமமிகுங் காளா முகம்பின்னர் மாவிரதஞ்
சேம வைரவமுஞ் சேர்.

உட்சமயம்:—சைவம், பாசுபதம், வாமம், காளாமுகம், மாவிரதம், வைரவம். (சு)

## புறச்சமயம்.

14. புத்த மருகம் புகல்பாஞ்ச ராத்திரமே
சித்த முறும்பட்டா சாரியஞ்—சித்திரமாய்க்
கூறியமீ மாஞ்சங் குறித்தலோ காயதத்தோ
டாறும் புறச்சமய மாம்.

---

* ஓர்க்கோலை = அம்பர்; ஓர்க்கோலையை விலக்கிக் கவடியைக் கொள்வாருமுளர். ‡ விருத்தம் - மூப்பு.

புறச்சமயம்:—பௌத்தம், ஆருகதம், பாஞ்சராத்திரம், பட்டாசாரியம், மீமாஞ்சம், உலோகாயதம். (கூ)

### ஆறங்கம்.

15. ஆறங்க மந்திரத்தோ டாகும் வியாகரணந்
தேறு நிகண்டுடன்சந் தோபிசிதந்—கூறு
நிருத்தமே சோதிடங்க ளிச்சயித்துக் கொண்டு
திருத்தமுறச் சொன்னார் தெளிந்து.

ஆறங்கம்:—மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம். (கூ)

### எழுபிறப்பு, எழுசமுத்திரம்.

16. தேவர் விலங்குமக்கள் சேண்பறவை யூர்வன
தாவரம்நீர் வாழ்வ வெழுபிறப்பாம்—தாவு
முவர்பா றயிர்கரும் பொண்ணீர் மதுநெய்
சிவணு மெழுகடலுந் தேர்.

எழுபிறப்பு:—தேவர், விலங்கு, மக்கள், பறவை, ஊர்வன, தாவரம், நீர்வாழ்வன. (எ)

எழுசமுத்திரம்:—உப்புக்கடல், பாற்கடல், தயிர்க்கடல், கரும்புக் கடல், நீர்க்கடல், தேன்கடல், நெய்க்கடல். (எ)

### எழுமுனிவர்.

17. போற்றுகும்ப யோனி புலத்தியன் மார்க்கண்டன்
சாற்றுங்கி ரன்வசிட்டன் கௌதமனு—மேற்றுபுகழ்க்
காசிப னெடெழுவர் காணுங் கலைமுனிவ
ராசில் பெரியோர்க ளாம்.

எழுமுனிவர்:—அகத்தியன், புலத்தியன், மார்க்கண்டன், ஆங்கிரன், வசிட்டன், கௌதமன், காசிபன். (எ)

### மேலேழுலகம்.

18. பூலோக மேபுவ லோகந் தவலோக
மேல்சன லோகஞ் சுவலோகம்—வாவியசீர்ச்
சத்திய லோகம் மகலோகந் தாமிவை
யுத்தமமார் மேலே ழுலகு.

மேலேழுலகம்:—பூலோகம், புவலோகம், தவலோகம், சனலோகம், சுவலோகம், சத்தியலோகம், மகலோகம். (எ)

## கீழேழுலகம்.

19. அதல விதல மடைவாஞ் சுதல
நிதலம் ரசா தலப்பா தாள—மூதுபோகந்
தன்னுந் தராதலங்க ளென்றே தொடர்பினுடன்
மண்ணின்கீ ழேழுலக மாம்.

கீழேழுலகம்:—அதலம், விதலம், சுதலம், நிதலம், இரசாதலம், பாதாளம், தராதலம். (எ)

## சத்தநதி.

20. கங்கை யமுனை சரசுவதி காவேரி
பொங்கு குமரி நருமதை—தங்குசீர்க்
கோதா வரியுட னேழுங் குலநதியென்
றோதுந் தமிழி னுரை.

சத்தநதி:—கங்கை, யமுனை, சரசுவதி, காவேரி, குமரி, நருமதை, கோதாவரி. (எ)

## எட்டுவகைமணம்.

21. கந்தருவந் தெய்வங் கனிபிரமம் பைசாசம்
பந்த முறும்பிரசா பத்திய—நந்தலில
தாமென்னு மாரிட மாசுர மிராக்கதஞ்
சேமமண மெட்டெனவே செப்பு.

எண்வகைவிவாகம்:—கந்தருவம், தெய்வம், பிரமம், பைசாசம், பிரசாபத்தியம், ஆரிடம், ஆசுரம், இராக்கதம். (அ)

## அட்டதிக்குப் பாலகர்.

22. இந்திர னங்கி யியம னிருதியுட
னுந்த வருண னுயர்வாயு—விந்தைமிகு
பண்டோர் குபேரன் பரிவிலீ சானனோ
டெண்டிசைவாழ் பாலகரென் றெண்.

அட்டதிக்குப் பாலகர்:—இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன். (அ)

### அட்டநாகம்.

23. வாசுகி தக்க னநந்தன் பதுமனொடு
பேசு குளிகன் மகாபதும—னேசிலாக்
கார்க்கோ டகனுடனே சங்கனிவை யெண்டிசையு
மார்க்குமா வெட்டென்ப வாம்.

அட்டநாகம்:—வாசுகி, தக்கன், அநந்தன், பதுமன், குளிகன், மகா பதுமன், கார்க்கோடகன், சங்கன். (அ)

### அட்டதிசையானை.

24. அயிரா வதங்குமுதம் புண்டரிகம் பின்னுஞ்
சயவா மனமஞ் சனமும்—வயனேரும்
புட்பதந்தஞ் சுப்பிரதீ கஞ்சா ருவபௌமம்
அட்டதிசை யானையென லாம்.

அட்டதிசையானை:—அயிராவதம், குமுதம், புண்டரிகம், வாமனம், அஞ்சனம், புட்பதந்தம், சுப்பிரதீகம், சார்வபௌமம். (அ)

### அட்டகுலபருவதம்.

25. இமய கிரிகைலை மந்தர நீல
மமையேம கூட நிடதஞ்—சிமையமுறுங்
கந்தமலை விந்தம்பார் காத்து நிலந்திலக்கு
மந்த மலையெட்டு மாம்.

அட்டகுலபருவதம்:—இமயம், கைலை, மந்தரம், நீலம், ஏமகூடம் நிடதம், கந்தமாதனம், விந்தம். (அ)

### அட்டமங்கலம்.

26. தீப முடன்கவரி கண்ணாடி சேர்ந்தோட்டி
தாபந்நீர் கும்பந் தனிமுரசஞ்—சேப
மணிகொடி மீனிரட்டை மங்கல மெட்டென்
றுலகிற் பெரியோ ருரை.

அட்டமங்கலம்:—விளக்கு, சாமரம், கண்ணாடி, தோட்டி, நிறை குடம், முரசு, கொடி, இணைக்கயல். (அ)

### சிறப்பிலாவெண்பெயரேச்சம், எண்கணம்.

27. குறள்செவிடு மூங்கை முடங்கூன் குருடு
துறபிண்டம் பேடனே பேச்ச—முறுமெட்டாம்

அம்புலி பரிதி யனல்கா லியமானன்
கம்புவிநீ ரோரெண் கணம்.

உறுப்பிலாவெண்பேரெச்சம்:—குறள், செவிடு, ஊமை, முடம், கூன், குருடு, உறுப்பில்பிண்டம், உறுப்பில் மயக்கம். (அ)
எண்கணம்:—சந்திரன், சூரியன், தீ, வாயு, இயமானன், ஆகாயம், நிலம், நீர். (அ)

## ஒன்பதுவாயில், நவரசம்.

28. கண்செவி மூக்குக் கவின்வாய் குதங்குய்ய
நண்ணிய வாயி னவமென்ப—வொண்மைதருங்
குற்சை நகைகருணை கோபம் பயம்வீரம்
அற்புதஞ் சாந்த மணி.

ஒன்பதுவாயில்:—கண்ணிரண்டு, செவியிரண்டு, மூக்கிரண்டு, வாய், குதம், குய்யம். (கூ)
நவரசம்:—குற்சை, நகை, கருணை, கோபம், பயம், வீரம், அற்புதம், சாந்தம், சிங்காரம். (கூ)

## நவக்கிரகம்.

29. கதிர்திங்கள் செவ்வாய் கணக்க னரசன்
முதிர்வெள்ளி காரி யொளிர்கின்—பதிமேவுங்
காரா ரிராகு கவிகேது தானவமாம்
போரார்கோ ளென்றே பிரி.

நவக்கிரகம்:—ஆதித்தன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழம், வெள்ளி, சனி, இராகு, கேது. (கூ)

## பன்னிரண்டிராசி.

30. மேட மிடப மிதுனமே கர்க்கடகம்
கடகஞ் சேர்சிங்கங் கன்னிதுலா—நீடு
விருச்சிகஞ்சா பம்மகரங் கும்பமுடன் மீனம்
தெருட்டோரை பன்னிரண்டுந் தேர்.

பன்னிரண்டிராசி:—மேடம், இடபம், மிதுனம், கர்க்கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனு, மகரம், கும்பம், மீனம். (கஉ)

## பதினெண்கணம்.

31. சுரரசுரர் சித்தர்பேய் தூயவிஞ்சர் பூத
முரகர்யக்கர் மோகர்காந் தர்வர்—குருவர்

கத்தோடு, எழுமுழ உயரமும், ஒன்பதுமுழ நீளமும், பதின் மூன்றுமுழச் சுற்றளவுமுடைத்தாய், முன்னே யுயர்ந்து பின்னே தாழ்ந்து மும்மதமுடையதாய்ப் பகைவரைக் கோபித்துத் தனது நிழலை மற்றோர் யானையென்று அழித்து மிதித்துச் சிறிய கண்களைப் பெற்று அழகுவாய்ந்துளது, அரசர்களால் நடத்தப்படும் அரசயானையென்று கருதுக.

### அரசர் குதிரை.

36. மாதர்மணை மொத்த மணத்ததாய் வாழைபெறக்[பின்
கோதின் மடல்போற் கொழுஞ்செவியாய்ப்—பாதமுன்
மெய்ப்பா ரிருந்தி விரலளவெண் பத்திரண்டே
வைப்புயர்வா மன்னவர்பாய் மா.

அரசர் குதிரை:—கற்புடைமகளிர் மணத்தையொத்த மணத்தை யுடையதாய், வாழைப்பூவின் மடல்போலக் கொழுவிய செவியை யுடையதாய்க் காலின் முன்னும் பின்னும் உண்மையாக நிலத் திற் சமமாக விருத்தி, எண்பத்திரண்டு விரலளவுயர்வுடையது, அரசர்குதிரை.

### நூலின் முதலிலே வைக்கும் மங்கலச்சொல்.

37. சீரெழுத்துப் பொன்பூ திருமணி நீர்திங்கள்
கார்பரிதி யானை கடலுலகந்—தேர்மலைசொல்
கங்கை நிலம்பிறவுங் காண்டகைய முன்மொழிக்கு
மங்கலமாஞ் சொல்லின் வகை.

நூலின் முதலிலே வைக்கும் மங்கலச்சொல்:—சீர், எழுத்து, பொன், பூ, திரு, மணி, நீர், திங்கள், கார், பரிதி, யானை, கடல், உல கம், தேர், மலை, சொல், கங்கை, நிலமுமாகிய இவையும், இவற் றின் பரியாயநாம முதலியனவும் மங்கலச்சொற்களின் வகைக ளாம்.

ஆகச் செய்யுள்-௨௮௫.

பல்பெயர்க்கோருபெயர்த்தோகுதி முற்றுப்பெற்றது.

---

## உரிச்சொல் நிகண்டு முற்றுப்பெற்றது.

---